# ஆதிபராசக்தி துர்க்கை ஸ்தோத்திரம்




தொகுப்பாசிரியர் :

C. N. நாச்சியப்பன்

வெளியீடு :

**பொன்னழகம்மை நூலகம்**

*11, ஆருவது குறுக்குத் தெரு,*

*ஆண்டவர் நகர்,*

*கோடம்பாக்கம் : : சென்னை-600 024.*

"சொல் புதிது பொருள் புதிது சுவை புதிது
ஜோதி மிக்க நவ கவிதை இந்நூற் கவிதை !"



விலை ரூ. 5-00

முதற் பதிப்பு 1988

ஸ்ரீ பி. எல். எஸ். பிரஸ், 'திருமலை', சென்னை-600 024.

# பொருளடக்கம்



சகல தோஷங்களையும் நீக்கி,
சகல செல்வங்களையும், மங்களத்தையும் நல்கும்

## ஸ்ரீ துர்க்கா ஸ்தோத்திரம்

பகவதி தேவி பர்வத தேவி
பலமிகு தேவி துர்க்கையளே.
ஜெகமது யாவும் ஜெயஜெய வெனவே
சங்கரி யுன்னைப் பாடிடுமே.
ஹநஹந தகதக பசபச வெனவே
துளிர்த்திடு ஜோதி யானவளே.
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெயதுர்க்கா !

1

ஓம்

# துர்க்கா ஸப்த ஸ்லோகீ

[லக்ஷஜபம், அல்லது இதை ஸம்புடமாகச் சேர்த்தால் ராஜவச்யம்.]

ஞானிநுமபி சேதாம்ஸி தேவீ பகவதீ ஹி ஸா ।
பலாதாக்ருஷ்ய மோஹாய மஹாமாயா ப்ரயச்சதி ॥

[ஸர்வ ஆபத்தும் நிவர்த்தியடையும்.]

துர்க்கே ஸ்ம்ருதா ஹரஸி பீதிமசேஷ ஜந்தோ :
ஸ்வஸ்தைஸ் ஸ்மிருதா மதிம் அதீவசுபாம் ததாஸி
தாரித்ர்ய துக்க பய ஹாரிணி கா த்வதன்யா
ஸர்வோபகார கரணுய ஸதார்த்ரசித்தா

[ஸகலவித மங்களமும் உண்டாகும். தினமும் மாலையில் தீபம் ஏற்றிவைத்து இம்மந்திரத்தைக்கூறி ஏழு முறைகள் வலம் வந்து நமஸ்காரம் செய்தால் கன்னியர் விரைவில் நல்ல கணவனே அடைவர்.]

ஸர்வமங்கள மாங்கல்யே'சிவேஸர்வார்த்த ஸாதிகே
சரண்யே த்ர்யம்பகே கௌரி நாராயணி நமோஸ்துதே

[சகல துன்பங்களும் நிங்கும்]

சரணுகத தீனர்த பரித்ராண பராயணே
ஸர்வஸ் யார்த்திஹரே தேவி நாராயணி நமோஸ்துதே.

[மஹாபய நிவர்த்தி ஏற்படும்]

ஸர்வஸ்வரூபே ஸர்வேசி ஸர்வ சக்தி ஸமன்விதே
பயேப்யஸ் த்ராஹி நோ தேவி துர்க்கே தேவி நமோஸ்துதே.

[பிணி நீக்கம் உண்டாகும்]

ரோகா நசேஷான் அபஹம்ஸி துஷ்டா
ருஷ்டாது காமான் ஸகலாநபீஷ்டான்
த்வா மாச்ரிதானும் ந விபந் நராணும்
த்வா மாச்ரிதா ஹ்யாச்ரயதாம் ப்ரயாந்தி.

[பகை நாசம் ; அச்சம் தவிரும்]

ஸர்வபாதா ப்ரசமனம் த்ரைலோக்யஸ்யாகிலேச்வரி
ஏவமேவ த்வயா கார்யம் அஸ்மத் வைரி விஞசனம்.

[இதை ஸம்புடமாகச் சேர்ப்பதால் நல்ல மனைவி கிடைப்பாள். (அர்க்கள ஸ்தோத்திரம்).]

பத்னீம் மனோரமாம் தேஹி மனோவ்ருத்தானுஸாரிணீம்
தாரிணீம் துர்கஸம்ஸார ஸாகரஸ்ய குலோத்பவாம்.

[மஹாமாரீ சாந்தியடையும்.]

இத்தம் யதா யதா பாதா தானவோத்தா பவிஷ்யதி ।
ததா ததாவதீர்யாஹம் கரிஷ்யாம் யரிஸம்க்ஷயம் ॥

[பேய் பிசாசு நீங்கும்]

ஹினஸ்தி தைத்ய தேஜாம்ஸி ஸ்வனேனு பூர்ய யாஜகத் ।
ஸா கண்டா பாது நோ தேவி பாபேப்யோ
நஸ்ஸுதானிவ ॥

[அவையில் வெற்றி]

ஸிம்ஹநாதேன சும்பஸ்ய வ்யாப்தம் லோகத்ரயாந்தரம்
நிர்காத நிஸ்வனோ கோரோ ஜிதவான் அவனீபதே

[ஸந்தான கோபால மந்திரத்தை ஸம்புடமாகச் சேர்த்து சப்த சதியை 21 தடவை பாராயணம் செய்தாலும், நவாக்ஷரீ ஸம்புடிதமாக பதினாறு முறை சப்த சதியைப் பாராயணம் செய் தாலும் புத்திரப்பேறு உண்டாகும். த்ரயம்பக மந்திரத்தை ஸம்புடமாகச் சேர்த்தால் அபமிருத்யு பயம் நீங்கும். பிரணவ ஸம்புடிதமாக ஜபித்தால் மந்திர சித்தி.]

''தேவகீஸுத கோவிந்த வாஸுதேவ ஜகத்பதே
தேஹி மே தனயம் கிருஷ்ண த்வாமஹம் சரணம் கத :''

[ஸகல ஸௌபாக்யப் பேறு, ஸம்பத் அபிவிருத்தி.]

ஸ்ருஷ்டிஸ்திதி விநாசானும் சக்திபூதே ஸனுதனி
குணாச்ரயே குணமயே நாராயணி நமோஸ்துதே.

*[விஷ பய நிவர்த்தி, போருக்குத் தகுந்ததாகத் தன் படை ஆகுதல்.]*

ரக்ஷாம்ஸி யத்ரோக்ர விஷாச்ச நாகா
யத்ராரயோ தஸ்யுபலானி யத்ர ।
தாவானலோ யத்ர ததாப்தி மத்யே
தத்ர ஸ்திதா த்வம் பரிபாஸி விச்வம் ॥

*[தனப் பிராப்தி உண்டாகும்]*

தே : ஸம்மதா ஜனபதேஷு தனானி தேஷாம்
தேஷாம் யசாம்ஸி நச ஸீததி தர்ம வர்க்க :
தன்யாஸ் தஏவ நிப்ருதாத்மஜ ப்ருத்ய தாரா
யேஷாம் ஸதாப்யுதயதா பவதீ ப்ரஸன்னா

*[இழந்த நாட்டைத் திரும்பப் பெறுதல்]*

ததோ வவ்ரே ந்ருபோ ராஜ்யம் அவிப்ரம்ச் யன்ய ஜன்மனி
அத்ரைவ ச நிஜம் ராஜ்யம் ஹதசத்ரு பலம் பலாத்

*[சர்வ காம சித்தி ஏற்படும்]*

பகவத்யா க்ருதம் ஸர்வம் நகிஞ்சிதவ சிஷ்யதே
யதயம் நிஹதச் சத்ருரஸ்மாகம் மஹிஷாஸுர :

*[பகைவரின் சேனை நாசம்]*

ஸகதாஸு : பபாதோர்வ்யாம் தேவீ சூலாக்ர விக்ஷத :
சாலயன் ஸகலாம் ப்ருத்வீம் ஸாப்தி த்வீபாம் ஸபர்வதாம்

*[உலக க்ஷேமம் உண்டாகும்]*

விச்வேச்வரி த்வம் பரிபாஸி விச்வம்
விஸ்வாத்மிகா தாரயஸீதி விச்வம்
விச்வேச வந்த்யா பவதீ பவந்தி
விச்வாச்ரயா யே த்வயி பக்திநம்ரா :

*[உலகத்தின் ஆபத்து நீங்கும்]*

தேவி ப்ரபன்னார்த்தி ஹரே ப்ரஸீத
ப்ரஸீத மாதர் ஜகதோகிலஸ்ய
ப்ரஸீத விச்வேச்வரி பாஹி விச்வம்
த்வமீச்வரீ தேவி சராசரஸ்ய

[புகழ் உண்டாகும்]

தத : சதேன நேத்ராணும் நிரீக்ஷிஷ்யாமி யந்முனீன்
கீர்த்தயிஷ்யந்தி மனு ஜா : சதாக்ஷீ மிதி மாம் தத :

[இஷ்டமான வரனை அடைதல்]

ஏவம் தேவ்யா வரம் லப்த்வா ஸுரத : க்ஷத்ரியர் ஷப : ।
ஸூர்யாத் ஜன்ம ஸமாஸாத்ய ஸாவர்ணிர்பவிதா மனு : ॥

[திக்குவாய், ஊமை நீங்கும்]

இத்யுக்தா ஸா ததா தேவீ கம்பீராந்தஸ்மிதா ஜகௌ
துர்கா பகவதீ பத்ரா யயேதம் தார்யதே ஜகத் ॥

## அர்க்களம்

காரிய சித்தி பெறுவதற்கு இடையூருகவுள்ள பாபம் அர்க்களம் போல் (அர்க்களம்—தாழக்கோல்). தடங்கலாக இருப்பது. அந்த இடையூறு நீங்குவதற்காக இந்த ஸ்துதி செய்யப்படுகிறது. அர்க்கள ஸ்தோத்திரத்தை மனப்பாடம் செய்து இதயத்தில் வைத்திருப்பவர் தடங்கலற்றவராக ஆகிருர் என்று கூறப்பட்டிருக்கிறது. இதில் ஒவ்வொரு மந்திரத்திலும், பகைவரை அழித்து ரூபத்தையும், வெற்றியையும், புகழையும் கொடுத்தருளுவாய் என்று பிரார்த்திக்கப்படுகிறது. இதிலுள்ள ஒவ்வொரு மந்திரத்தையும் தனியாக ஜெபித்தாலும், சப்த சதியில் சம்புடமாகச் சேர்த்துப் படித்தாலும், அம்மந்திரத்தின் பொருளுக்குத் தக்கபடி வெவ்வேறு வகையான பலன் சொல்லப்படுகிறது.

## அர்க்கள ஸ்தோத்திரம்

ஜயந்தீ மங்களா காளீ பத்ரகாளீ கபாலினி
துர்க்கா க்ஷமா சிவா தாத்ரீ ஸ்வாஹா ஸ்வதா
நமோஸ்துதே
ஜயத்வம் தேவி சாமுண்டே ஜய பூதார்த்தி ஹாரிணி
ஜய ஸர்வகதே தேவி காளராத்ரி நமோஸ்து தே

மதுகைடப வித்ராவி விதாத்ரு வரதே நம :
ரூபம் தேஹி ஜயம் தேஹி யசோ தேஹித்விஷோ ஜஹி
மஹிஷாஸுர நிர்ணுச விதாத்ரி வரதே நம : | ரூபம்...
வந்தி தாங்க்ரியுகே தேவி ஸர்வ ஸௌபாக்யதாயினீ | ...
ரத்த பீஜவதே தேவி சண்டமுண்ட விஞசினி | ...
அசிந்த்ய ரூபசரிதே சர்வசத்ரு விஞசினி | ...
நதேப்யஸ்ஸர்வதா பக்த்யா சண்டிகே ப்ரணதாய மே | ...
ஸ்துவத்ப்யோ பக்திபூர்வம் த்வாம் சண்டிகே வ்யாதிநாசினி
சண்டிகே ஸததம் யேத்வாம் அர்ச்சயந்தீஹ பக்தித : | ...
தேஹி ஸௌபாக்ய மாரோக்யம் தேஹிமே பரமம் சுகம் | ...
விதேஹி த்விஷதாம் நாசம் விதேஹி பலமுச்சகை | ...
விதேஹி தேவி கல்யாணம் விதேஹி விபுலாம் ச்ரியம் | ...
வித்யாவந்தம் யசஸ்வந்தம் லக்ஷ்மீ வந்தம் ஜனம்குரு | ...
ப்ரசண்டதைத்ய தர்ப்பக்னே சண்டிகே ப்ரணதாயமே | ...
சதுர் புஜே சதுர்வக்த்ர ஸம்ஸ்துதே பரமேச்வரி | ...
க்ருஷ்ணேன ஸம்ஸ்துதே தேவி சச்வத் பக்த்யா ஸதாம்பிகே
ஹிமாசல ஸுதாநாதபூஜிதே பரமேச்வரி | ...
ஸுராஸுர சிரோரத்ன நிகுருஷ்ட சரணேம்பிகே | ...
இந்த்ராணீ பதிஸத்பாவ பூஜிதே பரமேச்வரி | ...
தேவி ப்ரசண்ட தோர்தண்ட தைத்ய தர்ப்ப விஞசினி | ...
தேவி பக்த ஜனோத்தாம தத்தானந்தோதயேம்பிகே | —
பத்னீம் மனோரமாம் தேஹி மனோவ்ருத்தானு ஸாரிணீம்
தாரிணீம் துர்க்க ஸம்ஸார ஸாகரஸ்ய குலோத்பவாம்
இதம் ஸ்தோத்ரம் படித்வாது மஹாஸ்தோத்ரம்
படேன்நர :
ஸது ஸப்த சதீ ஸங்க்யா வரமாப்னோதி ஸம்பதாம்

உ

## ஸ்ரீ மஹாமாயி தியானம்

[இதைப் படிப்பதால் வைசூரி, ஜுரம், சிரங்கு, சத்ருபயம் முதலியவைகள் நீங்கும் ]

ஸ ஜலாம்புதவச் சியாமாம் ரக்தமால் யானுலேபனும் |
துங்கஸ்தனும் விஸாலாக்ஷீம் நானலங்கார பூஷிதாம் || 1

*லிஸன்நிதம்ப பிம்பாட் யாம் வராரூடாம் ஸுஸோபனும்*
*ஹஸ்தாப்யாம் மார்ஜனீம் ஸூர்பம் ததானும்*
*நக்னிகாம் ஸ்மரேத் ‖ 2*

*[*நீருண்ட மேகம் போன்று கருப்பாய் இருப்பவளும், சிவந்த மாலைகளையும், சந்தனத்தையும் தரித்துக் கொண்டு இருக்கிறவளும், உயர்ந்த ஸ்தனங்களை உடையவளும், நீண்ட கண்களை உடையவளும், பல ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டவளும், அழகு வாய்ந்த நிதம்ப பாகத்தோடு கூடியவளும், கழுதைமேல் விற்றிருப்பவளும், சோபனத்தைச் செய்கிறவளும், மார்ஜனியையும், முறத்தையும் கையில் தரித்துக்கொண்டு இருப்பவளும், வஸ்திரமற்றவளாயும் இருக்கிற ஸ்ரீ சீதளா தேவியை தியானித்து நமஸ்கரிப்பாய் !*]*

*மார்ஜன்யா மார் ஜயன் ஸ்போடான்*
*ரோகாதன் யாம்ஸ்ச தாருணான் ।*
*ஸூர்ப்பே க்ருத்வாம் பஷிக்ஷாரே*
*ப்ரக்ஷிபந்தீம் முஹுர்முஹு : ‖*

*[*மேலும், துடைப்பத்தால் கொப்புளங்களையும், வேறு பயங்கரமான ரோகங்களையும், கூட்டி முறத்தில் கொண்டு, உப்பு சமுத்திரத்தில் அடிக்கடி போடுகிறவளாயும் இருக்கிறவளைத் தியானித்து நமஸ்காரம் செய்வாய்.*]*

உ
சிவமயம்
அகத்தியர் அருளிய

## இலக்குமி தோத்திரம்

*மூவுலகும் இடரியற்றும் அடலவுணர்*
*உயிரொழிய முனிவு கூர்ந்த*
*பூவைஉறழ் திருமேனி அருட்கடவுள்*
*அகன்மார்பில் பொலிந்து தோன்றித்*
*தேவர்உல கினும் விளங்கும் புகழ்க்கொல்லா*
*புரத்தினிது சேர்ந்து வைகும்*
*பாவை இருதாள் தொழுது பழமறைதேர்*
*குறுமுனிவன் பழிச்சுகின்றான்.* (1)



கொழுதியிசை அளிமுரலும் தாமரையென்
 பொருட்டிலுறை கொள்கைபோல
மழையுறழுந் திருமேனி மணிவண்ணன்
 இதயமலர் வைகுமானே
முழுதுலகம் இனிதீன்ற அருட்கொம்பே
 கரகமலம் முகிழ்த்தெந் நாளுங்
கழிபெருங்கா தலில்தொழுவோர் வினைதீர
 அருள் கொழிக்குங் கமலக் கண்ணாய். (2)

கமலைதிரு மறுமார்பன் மனைக்கிழத்தி
 செழுங்கமலக் கையாய் செய்ய
விமலைபசுங் கழைகுழைக்கும் வேனிலான்
 தனையீன்ற விந்தை தூய

அமுதகும்ப மலர்க்கரத்தாய் பாற்கடலுள்
அவதரித்தோய் அன்பர் நெஞ்சத்
திமிரமகன் றிடவொளிருஞ் செழுஞ்சுடரே
எனவணக்கஞ் செய்வான் மன்னே. (3)

மடற்கமல நறுப்போ குட்டில் அரசிருக்கும்
செந்துவர் வாய்மயிலே மற்றுன்
கடைக்கணருள் படைத்தன்றே மணிவண்ணன்
உலகமெலாங் காவல் பூண்டான்
படைத்தனன்நான் முகக்கிழவன் பசுங்குழலி
மதிபுனைந்த பரமன் தானும்
துடைத்தனன்நின் பெருஞ்சீர்த்தி எம்மனோ
ராலஎடுத்துச் சொல்லற் பாற்றே. (4)

மல்லல் நெடும் புவியனைத்தும் பொதுநீக்கித்
தனிபுரக்கு மன்னர் தாமும்
கல்வியினில் பேரறிவில் கட்டழகில்
நிகரில்லாக் காட்சி யோரும்
வெல்படையில் பகைதுரந்து வெஞ்சமரில்
வாகைபுனை வீரர்தாமும்
அல்லிமலர்ப் பொருட்டுறையும் அணியிழைநின்
அருள்நோக்கும் அடைந்துளாரே. (5)

செங்கமலப் பொலந்தாதில் திகழ்ந்தொளிரும்
எழில்மேனித் திருவே வேலை
அங்கண்உல கிருள்துரக்கும் அலர்கதிராய்
வெண்மதியாய் அமரர்க் கூட்டும்
பொங்கழலாய் உலகளிக்கும் பூங்கொடியே
நெடுங்கானில் பொருப்பில் மண்ணில்
எங்குளைநீ அவணன்றே மல்லல்வளம்
சிறந்தோங்கி இருப்ப தம்மா. (6)

## இலக்குமி தோத்திரப் பலன்

என்றுதமிழ்க் குறுமுனிவன் பன்னியொடும்
இருநிலத்தில் இறைஞ்ச லோடும்
நன்றுனது துதிமகிழ்ந்தேம் நான்மறையோய்
இத்துதியை நவின்ருேர் யாரும்
பொன்றலரும் பெரும்போகம் நுகர்ந்திடுவர்
ஈங்கிதனைப் பொறித்த ஏடு
மன்றல்மனை அகத்திருப்பின் வறுமைதரு
தவ்வையவண் மருவல் செய்யாள்.

## ஸ்ரீ சந்தோஷிமாதா மகிமை !

மனோகரமான மாலைப் பொழுது. எட்டுக் கைகளிலும், கிளி, மாதுளம்பழம், கலசம், அங்குசம், பாசம், கற்பகக் கொடி, கட்கம், வரதம் இவற்றைப் பெற்று பிரகாசமாக ஜொலிக்கிருர் ஸ்ரீ விநாயகப் பெருமான். அமுதப் பிரவாகம் போன்ற வெண்மை நிறத்தோடு, நீலத் தாமரைப் பூவை ஏந்திய, சித்தி, புத்தி என்னும் இரு தேவிமார்களோடு திகழ்கிருர். அவரது இரு ஆண் குழந்தைகள் அவரை நோக்கி ஓடி வருகிருர்கள்.

ரக்ஷாபந்தன விழா பற்றி நாரதர் விரிவாகக் கூறுகிருர். இரண்டு குழந்தைகளும், தாங்களும் ரக்ஷை கட்டிக் கொள்ள வேண்டும்; அதற்கு எங்களுக்கு ஒரு சகோதரி வேண்டும்; என்று பிடிவாதம் செய்தார்கள். விநயகர், என்ன செய்வது என்று யோசிக்கும் சமயம், நாரதர், ''உங்கள் அருளால் இவர்களுக்கு ஒரு சகோதரியை உருவாக்கித் தாருங்கள் !'' என்று கேட்டுக் கொண்டார். சித்தி, புத்தி மூலம் அழகே உருவாக ஜொலிக்கும் ஒரு சகோதரியை உருவாக்கித் தந்தார்.

பார்வதி தேவியின் சக்தியையும், லக்ஷ்மி தேவியின் ஐஸ்வரியத்தையும், சரஸ்வதி தேவியின் கல்விச் சிறப்பையும் ஒருங்கே பெற்று ஜொலிக்குமாறு தனது அருள் சக்தியைத் தந்து உதவினுர். மூன்று தேவியரும் தமது சக்தி அம்சத்தோடு திகழ, குழந்தையை ஆசீர்வதித்தார்கள்

அவளும் அக மலர்ச்சியோடு இரண்டு குழந்தைகளுக்கும் கையில் ரக்ஷையைக் கட்டி வாழ்த்தினுள். குழந்தைகளுக்குச் சந்தோஷத்தை உண்டாக்கியதால், அவளுக்குச் 'சந்தோஷி' என்ற பெயரிட்டு மும்மூர்த்திகளும் வாழ்த்தினுர்கள். வெள்ளிக் கிழமையில் பிறந்ததினுல், வெள்ளிக்கிழமையில் அவளை ஆராதித்து, விரதம் இருப்பவர்கள் சகல செளபாக்கியங்களையும் பெறுவார்கள் என்று விஞயகரும் வாழ்த்தி அருளினுர்.

நீண்ட காலமாகத் திருமணம் ஆகாது வருந்தும் கன்னியர் அன்னை சந்தோஷி மாதாவை ஆராதித்து வெள்ளிக் கிழமை விரதமிருந்து முறைப்படி அனுஷ்டித்துப் பயனடையலாம். வட இந்தியாவில் இந்த விரதம் மிகவும் பிரசித்தியானது. தமிழ்நாட்டிலும் பல பக்தர்கள் இவ் விரதத்தைக் கடைப்பிடித்துத் திருமணப் பாக்கியத்தையும், சகல செளபாக்கியங்களையும் பெற்றிருக்கிருர்கள்.



## ஸ்ரீ சந்தோஷிமாதா மங்களாஷ்டகம்

[அன்புடன் கையில் மலரை வைத்துக் கொண்டு சுலோகங்களைச் சொல்லி மலரை அம்பாள் திருவடியில் சேர்க்கவும்.]

1. மஹா கணேச ஸுதயோ :
   ரக்ஷா பந்தன ஹோதவே ।
   கணேச க்ருபயா ஜாத ।
   ஸந்தோஷிண்யை ஸுமங்களம் ॥
2. கௌரீ வாணீ ராமா தேவீ
   சக்த்யா ரக்ஷண ஹேதவே ।
   ஸமு த்யோதித ரூபாயை
   ஸந்தோஷிண்யை ஸுமங்களம் ॥
3. மத்ய ப்ரதேச மத்யஸ்த
   கிரி ச்ருங்காலயே சுபே ।
   கலா ஷோடச ஸம்பூர்ண
   ஸந்தோஷிண்யை ஸுமங்களம் ॥
4. அஷ்டமீ நவமீ பூர்ணு
   ப்ருகுவாரே விசேஷத : ।
   பூஜ்யா சஅதி துஷ்டாயை
   ஸ்ந்தோஷிண்யை ஸுமங்களம் ॥
5. சாந்தாயை சாதகானும்ச
   கோபனுயை விரோதினும் ।
   ஸர்வ சக்தி ஸ்வரூபிண்யை
   ஸந்தோஷிண்யை ஸுமங்களம் ॥
6. வர்தின்யை தர்ம வர்தின்யை
   ஹர்ஷ தாயை க்ஷணே க்ஷணே ।
   ஸர்வ மங்கள ரூபிண்யை
   ஸந்தோஷிண்யை ஸுமங்களம் ॥
7. ஸவர்ணாயை ஸவர்ண வர்ணுயை
   ஸவர்ண தாயை ஸ்வபூஜகே ।
   காதாயை க்யாதி தாயைச
   ஸந்தோஷிண்யை ஸுமங்களம் ।
8. அதிரௌத் ராதி ஸௌம்யாயை
   சித்தி தாயை ஸுகர் மணும் ।
   ஸர்வ ரக்ஷா கராயை ச
   ஸந்தோஷிண்யை ஸுமங்களம் ॥

9. ஸந்தோஷிணி ஜகன் மாது
மங்களம் படதாம் க்ருஹே ।
மங்களானி ப்ரவர்தந்தே
தத்ர லக்ஷ்மீ ச ஸுஸ்த்திரா ॥

## மூகாம்பிகை !

கொல்லூர்த் திருத்தலத்தில்
குடிகொண்ட பெருந்தேவி !
வெள்ளக் கருணையிலே
விற்றிருக்கும் அருள்வாணி !

மூகாம்பிகே. உயர் வேதாம்பிகே,
முப்புரம் எரித்தவரின்
ஆதாரம் ஆனவளே;
ஆதிபராசக்தி அன்னையே !

புலரும் பொழுதினிலே
பூவிலுறை கலைவாணி !
மலரும் தாமரையில்
மங்களத் திருச்செல்வி !

விளக்கேற்றும் வேளையிலே
வெற்றித் திருமகளே !
கலக்கங்கள் போக்கிடுவாய் !
கனிவுடனே காத்திடுவாய்

சங்கரன் பங்கிலுறை
சங்கீத வாணியுன்னைச்
சங்கரக் குருநாதன்,
சங்கீதச் சலங்கையொலி

நின்றவுடன் பிரதிஷ்டை
மன்றத்தில் செய்ததனுல்
என்றுமே அருள்புரியும்
ஏற்றமிகு தேவிநீ.

வீரத் திருவுருவும்
வெற்றிப் புன்னகையும்
சாரக் கவியொளியும்
சங்கீதச் சிரிப்பொலியும்




அருளின் பெருமனமும்
ஆனந்தப் பெருங்குணமும்
கருணைத் திருவிழியும்
கன்னல் திருவடியும்

பிள்ளைப் பெறுவரமும்
பெருஞ்செல்வம் தருவரமும்
தொல்லை அகற்றி நிதமும்
உள்ளம் களிக்கவரும்

ஓங்காரப் பெருந்தேவி !
ஆங்காரப் பெரும் பகைகள்
தீங்கெல்லாம் போக்கிடுவாய் !
திருவருளும் தேக்கிடுவாய் !



## அகிலம் காக்கும் அகிலாண்டேஸ்வரி

**அன்னையே அகிலாண்ட ஈஸ்வரியே**
**உன்னையே துதித்தோம் ஆதிபராசக்தியே** —அ
**மங்கள நாயகியே மாதங்கியே மனோன்மணியே**
**சிங்கத்தில் வரும் சிங்காரச் செல்வியே சீர்மிகும்** —அ
**காசியில் விசாலாக்ஷி காஞ்சியில் காமாக்ஷி**
**மதுரையில் மீனாக்ஷி மயிலையில் கற்பகமாம்** —அ
**ஆசிவழங்கிடும் அபிராமி தேவிநீ**
**அருளின் உருவே ராஜராஜேஸ்வரிநீ**
**மகாலக்ஷ்மி சரஸ்வதி மகிசாசுரமர்த்தினி**
**மாநிலம் காக்கும் மஹாராணி நீயே சதா அருளும் தாயே !** —அ

**அலைகடல் முனையில் கன்னியாய் நின்றாய்**
**மலைமகள் உருவில் அரக்கனைக் கொன்றாய்**
**சிலையெல்லாம் நீயே; சிங்காரத் தாயே ;**
**சீரெல்லாம் நீயே; பாரெல்லாம் நீயே.** —அ

## ராஜராஜேஸ்வரி துதி !

மங்களமாகவே நங்கை நல்லூரிலே
விளங்குகிருள் ராஜ ராஜேஸ்வரி
எங்கும் அவள் சக்தி என்றுணர்ந்தோர்க்கு
இன்ப வாழ்வளிப்பாள் ராஜராஜேஸ்வரி
அங்கிங்கெனுது உலகெங்கும் நிறைந்தருள்
புரிந்திடும் ராஜராஜேஸ்வரி
சங்கரனுர் மகிழ் சங்கரி கௌரி கிருபாகரி
சாமுண்டி ஈஸ்வரி சரணம் சரணமம்மா !
சரண் அருள்வாள் ராஜராஜேஸ்வரி !

## புவி ஆளும் புவனேஸ்வரி

புதுக்கோட்டை வாழும் புவனேஸ்வரி
பூமாரி பொழிந்திடும் ராஜேஸ்வரி—தேவி

புண்ணியம் தந்து புதுவாழ்வு ஈந்து
கண்ணியமுடனே காத்திடும் தேவி;

அதிஷ்டானம் அமர்ந்து அகிலம் காப்பாய்
அடியவர் மகிழ்ந்திட ஐஸ்வர்யம் அளிப்பாய்
புதுமைகள் பலவும் பொலிவுடன் சேர்ப்பாய்
பொய்மைகள் மறைய மெய்மைகள் படைப்பாய்
உள்ளத்தில் கள்ளம் ஒட்டாது நீக்குவாய்
உண்மையில் நன்மை ஓங்கிட ஆக்குவாய்
வெள்ளக் கருணை வேண்டிடத் தேக்குவாய்
விரும்பிடும் வாழ்வை அரும்பிட நோக்குவாய்

புன்னகை தவழும் பூப்போன்ற முகமும்
கண்களில் அருளும் கனிவான அகமும்
கரும்புடன் மலரும் கைகளில் ஏந்தும்
கமலத்தில் இருந்து கருணையில் நீந்தும்

எறும்பையும் காக்கும் எண்ணங்கள் வாழ்க
எழிலையும் சேர்க்கும் கலைகளும் வாழ்க
திறம்பட ஆற்றும் செயல்களும் வாழ்க
தித்திக்கும் உந்தன் திருப்பாதம் வாழ்க.

## கருக் காத்து ரட்சிக்கும்
## திருக்கருகாவூர் கர்ப்பரட்சகி !

### திருக்கோவில்

தஞ்சை மாவட்டம் பாபநாசம் வட்டத்தில் காவிரி நதியின் கிளை நதியான வெட்டாற்றங்கரையில் திருக்கருகாவூர் என்ற புண்ணியத் திருத்தலம் அமைந்துள்ளது. தஞ்சாவூரிலிருந்து கிழக்கே 20 கி.மீ. தொலைவிலும், கும்பகோணத்திலிருந்து தென் மேற்கே 20 கி.மீ. தொலைவிலும் இத்திருக்கோவில் இருக்கிறது. இதன் இறைவர் ஸ்ரீ முல்லைவனநாதர். இறைவி கர்ப்பரட்சகி ஆவர். (கருக்காத்தநாயகி) இது சம்பந்தர், அப்பர் ஆகியோரால் பாடப் பெற்ற திருத்தலமாகும். முல்லைவனநாதர் சுயம்புலிங்கமாகும். லிங்கம் புற்று மண்ணினால் ஆனது. ஆகவே சுவாமிக்குப் 'புனுகுச் சட்டம்' மட்டுமே சாற்றப்படுகின்றது. லிங்கத் திருமேனியில் முல்லைக்கொடி படர்ந்திருந்த வடுவை இன்றும் காணலாம். தீராத நோய் உடையவர்கள் சுவாமிக்குப் புனுகுச் சட்டம் சாற்றி நோய் நீங்கப் பெற்று வருகிறார்கள்.

### புராண வரலாறு

முற்காலத்தில் முல்லைவனம் என்ற இத்திருத்தலத்தில் 'கௌதமர்', 'கார்கேயர்' என்ற இரு முனிவர்கள் தவம் செய்தனர். 'நித்திருவர்' என்பவரும் 'வேதிகை' என்ற அவருடைய மனைவியும் இரு முனிவர்களுக்கும் பணிவிடைகள் செய்து வந்தனர். தங்களுக்குக் குழந்தை இல்லாக் குறையை இவர்கள் முனிவர்களிடம் சொல்ல; அவர்கள் முல்லைவனநாதரைப் பிரார்த்திக்கும்படி கூறினர். அவ்வாறே அவர்கள் வேண்ட; வேண்டுவார் வேண்டியதை நல்கும் பரம்பொருள் அவ்வாறே அருள 'வேதிகை' மணி வயிறு வாய்க்கப் பெற்றாள். கணவர் இல்லத்தில் இல்லாத பொழுது வேதிகை மயக்கமுற்றிருந்தாள். அப்பொழுது

'ஊர்த்துவபாதர்' என்ற முனிவர் வந்து பிச்சை கேட்க; வேதிகையால் பிச்சையிட இயலவில்லை. முனிவர் முனிந்து சாபமிடக் கருக் கலைந்துவிட்டது!

வேதிகை கர்ப்பரட்சாம்பிகையிடம் பணிந்து முறையிட்டாள். அம்பாளும் தோன்றிக் கலைந்த கருவை ஒரு குடத்தினுள் ஆவாகனம் செய்து குழந்தை உருவாகும் வரையிலும் வைத்துக் காப்பாற்றி, ''நைதுருவன்'' என்ற குழந்தையைக் கொடுத்தாள்.

வேதிகையும், ''இனி இத்திருத்தலத்தில் கர்ப்பரட்சாம்பிகையாகவே எழுந்தருளி, உலகில் கருத்தரித்தவர்களையும், கருவையும் காப்பாற்ற வேண்டும்!'' என்று பிரார்த்திக்க அம்பாளும் அவ்வாறே அருள் புரிந்தாள். அன்றிலிருந்து இத்தலத்திற்குத் 'திருக்கருகாவூர்' என்றும், அம்பாளுக்குக் ''கருக்காத்த நாயகி'' என்றும் பெயர்கள் வழங்கலாயிற்று.

வேதிகையின் குழந்தைக்குத் தாய்ப்பால் இல்லாமை கண்ட அம்பாள் காமதேனுவை அனுப்பிப் பால் கொடுக்கச் செய்தாள். காமதேனு தன் கால் குளம்பினுல் கீற பால் குளம் தோன்றியது. அதுவே ஆலயத்திற்கு முன்பக்கம் 'ஷீரகுண்டம்' என்று இன்றும் இருந்து வருகின்றது.

இத்தலத்து நாயகியை நினைத்து வணங்கினுல் கரு உண்டாகிறது; நிலைக்கிறது; சுகப் பிரசவம் ஏற்படுகிறது.

படிக்கு நெய் மெழுகுதல்

திருமணம் கூடிவராத கன்னியர்களும், பல ஆண்டுகளாகக் குழந்தை இல்லாத பெண்களும் கர்ப்பரட்சகி அம்பாள் சந்நிதியில் சிறிது நெய்யால் மெழுகிக் கோலமிட்டு அர்ச்சனை செய்து வழிபட, நல்ல பலன் ஏற்படும்.

நெய் மந்திரித்தல்

கர்ப்பரட்சகி அம்மன் திருப்பாதத்தில் வைத்து நெய் மந்திரித்துக் கொடுக்கிருர்கள். அந் நெய்யைத் தம்பதியினர் 48 நாட்கள் தொடர்ந்து இரவில் சிறிதளவு சாப்பிட்டு வர விரைவில் கருத்தரிக்கும்.

விளக்கெண்ணெய் மந்திரித்தல்

கர்ப்பரட்சகி அம்மன் திருப் பாதத்தில் விளக்கெண்ணெய் வைத்து மந்திரித்துக் கொடுக்கப் பெறுகிறது. இந்த எண்ணெய்யைப் பிரசவ வலி ஏற்படும் பொழுது வயிற்றில் தடவினுல் எந்தவிதமான கோளாருே; பேறு கால ஆபத்துக்களோ பின் விளைவுகளோ இல்லாமல் சுகப் பிரசவம் ஆகும்.

## ஸ்ரீ கர்ப்பரட்சாம்பிகா ஸ்தோத்திரம்

*[கர்ப்பிணிப் பெண்கள் இச்சுலோகத்தைச் சொல்லுவதால் சுகப் பிரசவம் நிச்சயம்]*

*ஸ்ரீ மாதவீ கானனஸ்தே—கர்ப்ப*
*ரக்ஷாம்பிகே பாஹி பக்தம் ஸ்துவந்தம்*

*(1)* வாபீதடே வாமபாகே—வாம
தேவஸ்ய தேவஸ்ய தேவீஸ்திதாத்வம்
மாந்யா வரேண்யாவதான்யா—பாஹி
கர்ப்பஸ்த்த ஜந்தூன் ததா பக்தலோகான்.

*(2)* ஸ்ரீ கர்ப்பரக்ஷாபுரேயா—திவ்ய
ஸௌந்தர்ய யுக்தா ஸுமாங்கல்ய காத்ரி
தாத்ரி ஜனீத்ரி ஜனுனும்—திவ்ய
ரூபாம் தயார்த்ராம் மனுேக்ஞாம் பஜேதாம்.

(3) ஆஷாட மாஸே ஸுபுண்யே—ஸுக்ர
வாரே ஸுகந்தேன கந்தேன லிப்தா
திவ்யாம் பராகல்ப வேஷா வாஜ
பேயாதி யாகஸ்த பக்தைஸ்
ஸுத்ருஷ்டாடா.

(4) கல்யாண தாத்ரீம் நமஸ்யே—வேதி
காக்ய ஸ்த்ரியா கர்ப்பரக்ஷாகரீம் த்வாம்
பாலேஸ் ஸதாஸே விதாங்க்ரிம்—கர்ப்ப
ரக்ஷார்த்த மாராது உபேதைரு பேதாம்.

(5) ப்ரம்மோத்ஸவே விப்ரவீத்யாம்—வாத்ய
கோஷேண துஷ்டாம்ரதே ஸந்தி விஷ்டாம்
ஸர்வார்த்த தாத்ரீம் பஜேஹம் தேவ
ப்ருந்தைர பீட்யாம் ஜகன்மாதர மத்வாம்

(6) ஏதத்க்ருதம் ஸ்தோத்ர ரத்னம்—தீக்ஷி
தானந்த ராமேண தேவ்யாஸ் ஸுதுஷ்ட்யை
நித்யம் யடேத்யஸ்து பக்த்யா—புத்ர
பௌத்ராதி பாக்கியம் பவேத்தஸ்ய நித்யம்

## கடைக்கண் நோக்கும் காமாக்ஷி !

பத்து விரல் மோதிரம் எத்தனை பிரகாசமது
பாடகத் தண்டை கொலுசும்
பச்சை வைடூரியம் மிச்சையா யிழைத்திட்ட
பாதச் சிலம்பினொளியும்
முத்து மூக்குத்தியும் ரத்தினப் பதக்கமும்
மோகன மாலையழகும்
முழுதும் வைடூரியமும் புஷ்பகரத்தினால்
முடிந்திட்ட தாலியழகும்,
சுத்தமா யிருக்கின்ற காதினிற் கம்மலுஞ்
சைங்கையிற்பொன் கங்கணமும்
ஜெகமெலாம் விலைபெற்ற முகமெலா மொளிவுற்ற
சிறுகாது கொப்பினழகும்

அத்திவரதன் தங்கைசக்தி சிவரூபத்தை
அடியனுற் சொல்லத் திறமோ,
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை
காமாட்சியே உமையே !

### அக்கினியில் தவம் செய்யும் மாங்காட்டுக் காமாக்ஷி !

செய்யும் தொழில்கள் நலமாக சேரும் செல்வம் நிலையாக
கையில் நீங்கா வலிவாகக் கருத்தில் உண்மை ஒளியாக
வையம் புகழத் துணையிருந்து வாழ்த்தி வரங்கள்
தரவேண்டும்
மையார் தடங்கண் மலைமகளே மாங்காடுறையுங் காமாட்சி

### கச்சி உமாதேவி !

தொல்லை மறைதேர் துணைவன்பால் யாண்டு வரை
எல்லை யருநாழி நெற்கொண்டோர்—மெல்லியலாள்
ஓங்குலகில் வாழு முயிரனைத்து மூட்டுமால்
ஏங்கொலிநீர்க் காஞ்சி யிடை. —வீர சோழியன்

### கருணைக்கு ஒரு தெய்வம் கற்பகவல்லி !

பூரணி மனோன்மணி தயாபரி பராபரி
புராதனி தராதரமெலாம்
பொற்புடன் அளித்த சிவசக்தி இமவான் உதவு
புத்ரிமகமாயி என்றே
சீரணி தமிழ்க்கவிதை பாடிமுறை யிடுவது உன்
செவிதனில் ஏறவிலையோ ?
தேஹி என்றால் உனக்கு ஈயவகை இல்லையோ
தீனரக்ஷகி அல்லையோ ?
ஆர்உலகில் பெற்றதாயன்றி மக்கள் தமை
ஆதரிப்பவரார் சொலாய்.
அன்னையே இன்னும் பாராமுகம் பண்ணுமல்
அடியேனை ரக்ஷி கண்டாய்.

மேருவை வளைத்தவன் இடத்தில்வளர் அமுதமே
விரிபொழில் திருமயிலை வாழ்
விரைமலர் குழல்வல்லி மரைமலர்ப் பதவல்லி
விமலி கற்பகவல்லியே.

* * *

ஆடும்மயிலாய் உருவெடுத்து அன்று இறைவன் திருத்தாள்
நாடி அர்ச்சித்த நாயகியாய் நின் நாமங்களைப்
பாடி உருகிப் பரவசம் ஆகும் அப்பாங்கு அருள்வாய்
காடெனவே பொழில் சூழ் மயிலாபுரிக் கற்பகமே.

## தாலிப் பாக்கியம் காக்கும் தையல் நாயகி!

தையல் நாயகி அம்மா தையல் நாயகி—என்றும்
தாயாக இருப்பவளே தையல் நாயகி
ஊர் உலகம் காப்பவளே தையல் நாயகி
உன்பாதம் சரணடைந்தேன் தையல் நாயகி.

குங்குமத்தில் ஒளி வீசும் தையல் நாயகி—முத்துக்
குமரனுக்கே தாயுமானாய் தையல் நாயகி
வைத்தியத்தின் சிகரமாம் தையல் நாயகி
வைத்தியநாதனுக்கே துணையுமானாள் தையல் நாயகி.

தங்கமுத்து மண்டபத்தில் தையல் நாயகி—என்றும்
சிங்காரக் கொலுவிருக்கும் தையல் நாயகி
பொங்கி வரும் காவிரிபோல் தையல் நாயகி
தங்கு தடை நீக்கிடுவாய் தையல் நாயகி.

மணம் முடிக்க கேட்டுக் கொண்டால் தையல் நாயகி
மங்களமாய் முடித்து வைப்பாள் தையல் நாயகி
மழலைச் செல்வம் வேண்டுமென்றால் தையல் நாயகி
மகிழ்ச்சியுடன் தந்திடுவாள் தையல் நாயகி.

மாடு மனை வீடு சுற்றம் தையல் நாயகி—நீ
மனது வைத்தால் வளருமம்மா தையல் நாயகி
காடு கரை தோப்பு வயல் தையல் நாயகி—உன்
கண்பட்டால் பொன் விளையும் தையல் நாயகி.



அம்மா என்றே உனையழைத்தால் தையல்நாயகி
ஆறுதலே பிறக்குதம்மா தையல்நாயகி
தாயே என்று உனையழைத்தால் தையல்நாயகி
நோய் நொடிகள் நீங்குதம்மா தையல்நாயகி.

செய்யும் தொழில் சிறக்க வேண்டும் தையல்நாயகி
செல்வ வளம் பெருக வேண்டும் தையல்நாயகி
ஆறுநூறு ஆக வேண்டும் தையல்நாயகி—அதில்
ஆனந்தமே பொங்க வேண்டும் தையல் நாயகி.

அம்மா என்றே உனையழைத்தேன் தையல்நாயகி
அடிபணிந்தேன் உந்தன் பிள்ளை தையல் நாயகி
என்ன குறை எனக்கினிமேல் தையல்நாயகி
எனக்கு துணை நீ இருக்கத் தையல்நாயகி.

மாங்கல்யம் காத்திடுவாய் தையல்நாயகி
மனம் போல வாழ்வளிப்பாய் தையல் நாயகி
ஓங்கார ரூபிணியே தையல்நாயகி
உள்ளத்தில் வாழுகின்றாய் தையல் நாயகி.

## ஆனந்தம் அருளும் அபிராமி !

அபிராமியே எங்கள் அபிராமியே—அன்னை
பராசக்தி அபிராமியே !

அபிமானம் கொண்டோர்க்கு சிவகாமி
ஆவேசம் கொண்டாலோ நவகாளி
ஆனந்தம் கொண்டாடக் காந்திமதி
அகிலம் கொண்டாடும் பார்வதியே.

பண்பான மயிலையில் கற்பகமே
பாரெல்லாம் போற்றிடும் அற்புதமே
சொல்லெடுத்தால் இவள் மங்களேஸ்வரி
வில்லெடுத்தால் இவள் சாமுண்டீஸ்வரி.

தாமரையில் இவள் தனலெக்ஷ்மி
பூமலர இவளே புவனேஸ்வரி
வீணையைக் கொண்டிருக்கும் கலைமகளே
வீட்டுக்கு வீடு அலைமகளே.

மேலான காஞ்சியிலே காமாட்சி
மேன்மையான காசியிலே விசாலாட்சி
மேதினியோர் புகழும் மதுரை மீனுட்சி.

## அபிராமிப் பதிகம்

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
குன்ருத வளமையுங்குன்ருத இளமையும்
கழுபிணி யிலாத உடலும்
சலியாத மனமும் அன் பகலாத மனேவியும்
தவருத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாருத வார்த்தையும்
தடைகள்வா ராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணுத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும் உதவிப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்;
அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே
ஆதிகட வூரின் வாழ்வே
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி
அருள்வாணி அபிராமியே.

## வரமளிக்கும் வடிவுடை மாணிக்கம்

வாய் திறந்து பேசம்மா
வடிவுடை மாணிக்கமே—நீ இன்று —வா

தாய் நீயென்றும் சேய் நானென்றும்
வாய்த்தபின் மௌனம் வந்ததேன் அனுதினம்? —வா

ஆய கலைகள் அறுபத்துநான்கு அனைத்தும் கற்ருலும்?
உன் அருளில்லை யென்ருல்
நேயமும் ஏது? நிம்மதி ஏது?
காயமும் இங்கு கடைத்தேறல் ஏது? —வா

உபாயம் ஒன்றுண்டு அபாயம் இனி இல்லை
தயாபரி நீ வந்து தன்னருள் சிந்த
என்னாளும் மகிழ சொன்னாலும் இனிக்கும்
பண்ணாளும் மொழியில் பக்குவ வழியில் வா



## கோடி நலம் தரும் கொப்புடையம்மன்

தங்கத் திருவுருவே, தர்மத்தின் பெருவடிவே
திங்கள் திருமுகமே தெவிட்டாத முத்தமிழே;
மங்காத ஒளிவிளக்கே, மனக்கோவில் குடிகொண்ட
மாதரசி;
மாநிலத்துப் பெருவாழ்வே; மாதேவி,
சிங்க வாகனத்தில் சீராக எழுந்தருளும்
சிங்காரச் செல்வியே; சிறப்பான பெண்ணரசே;
இங்குதித்து எங்கும் அருள் கொழிக்கும்
ஏற்றமிகு கொப்பை உடையவளே; எங்கள் தாயே;

சிவனுக்குச் செம்மேனி பாதி தந்தாய்
சிங்காரக் குகனுக்குச் சிவசக்தி வேல் ஈந்தாய்
நவநீதமும் திருடும் நாரணர்க்கு அலைமகளாய்
நான்முகர்க்குக் கலைமகளாய் நாளும் புகழ்சேர்ப்பாய்
அவமாயையால் உன்மகிமை அறியாத தக்கனுக்கும்
அன்புக் குழந்தையாய் அவதரித்தாய்
சிவகாம சுந்தரியே; சிங்காரக் கொப்பை உடையவளே
சிறியேனின் சிந்தனைகள் செயலாக அருளாயோ ?

## கலையழகு மிளிரும்
## மலையனூர் ஸ்ரீ அங்காளம்மன் பதிகம்

சீர்வளரும் மலையனூர் வந்துஐம் பத்தாறு
தேசமெங்கும் நிறைந்தாய்
திரளான செல்வமும் மைந்தரும் விஜயமும்
சேர்ந்தவடி யார்க் களிப்பாய்
தருமதுரை யதிவீரி ரணவீர பத்ரனும்
சதிரான இருளப்பனும்
சகல விஜயமும் பெற்ற பாவாடைராயனும்
தனது பரிவார முடனே
அருமைவளர் பூதகண நாதர்புடை சூழவே
அன்பாய்க் கொலுவிருப்பாய்
ஆயிசுந்தரி விமலி அம்பிகை அலங்காரி
அங்கையணி யுங்கபாலி
பொருது மடியார்கள் தன் பிணிபறந்தோடிட
விபூதி யருளுங் காளியே
பூங்காவினிழலுறை ஓங்கார சக்தியே
பூங்கா வனத் தாயே !



சென்னை ஸ்ரீகாளிகாம்பாள்

## காளிகாம்பாள் பாடல்

யாதுமாகி நின்றாய் காளி
எங்கும் நீ நிறைந்தாய்
தீது நன்மை எல்லாம் காளி
தெய்வ லீலை அன்றோ !
பூதமைந்தும் ஆனாய் காளி
பொறி களைந்தும் ஆனாய்
போதமாகி நின்றாய் காளி
பொறியை விஞ்சி நின்றாய்

இன்பமாகி விட்டாய் காளி
என்னுள்ளே புகுந்தாய்
பின்பு நின்னையல்லால் காளி
பிரிது நானும் உண்டோ ?

அன்பளித்து விட்டாய் காளி
ஆண்மை தந்து விட்டாய்
துன்பம் நீக்கிவிட்டாய் காளி
தொல்லை போக்கி விட்டாய்

கையில் கரும்பு கொண்டாய்
கண்ணில் அருளைக் கொண்டாய்
மெய்யில் கருணை கொண்டாய்
மேலாம் நினைவு கொண்டாய்
பொய்யில் உழலும் எம்மை
புன்மை நீக்கி விட்டாய்
ஐயமில்லைத் தேவீ எம்மை
அணைத்துக் காக்க வந்தாய்

பூவும் மணமும் பொட்டும்
புதுமை நலச் சிட்டும்
பாவும் சந்தம் சேரும்
பண்பு நலம் உயரும்
யாவும் தந்து காப்பாய்
யாதும் ஆன தேவீ !
தீதும் விலகும் காலம்
திருவும் அருளும் ஞானம்

எல்லாம் ஆன தேவீ !
இதயம் வாழும் ஆவீ !
வெல்லமாகும் பக்தி நீ
வெற்றி தரும் சக்தி
சொல்ல அரிய முக்தி
சூட்சமத்தின் சக்தி
உள்ளம் கோவில் கொண்டாய்
உருவம் ஒளியில் கண்டோம்.



## கருமாரி

கண்கண்ட தெய்வம் கருமாரித் தாயே !
கைகொடுத்து ஆதரிக்கும் கடவுளும் நீயே !

பண்கொண்டு உனைப்போற்றப் பாராமுகம் ஏனம்மா ?
பக்திமனம் கொண்டு பாடிக் களிக்கமனம் தேனம்மா !

விண்கொண்ட தேவரும் மூவரும் வெற்றி வீரரும்
உன் கருணை வேண்டியே ஓடோடிவந்து நிதம் வணங்கவே
நாகமொடு மோகநிலை வேகமொடு உன்னுருவம்
பாகமொரு பொன்னுருவம் பராசக்தி தன்னுருவம்
சிங்கப் பல்லோடு சிங்காரச் சொல்லோடு
இங்கித முகத்தோடு தங்கமன அகத்தோடு
மஞ்சளும் குங்குமமும் கொஞ்சிவரும் பேரழகு
தஞ்சமென வந்தோர்க்கு அஞ்சலெனும் சீரழகு
தேவிநீ ஓடிவந்து தெரிசனம் தந்திடுவாய்
ஆவிநீ ஆனவளே, அருள்நிலை ஈந்திடுவாய்
வேற்காட்டு வேல்விழியே, வெற்றிதரும் பாலமுதே
பார்காக்கும் பத்தினியே; பக்திக்கொரு உத்தமியே

கண்கண்ட தெய்வம் கருமாரித் தாயே !
கைகொடுத்து ஆதரிக்கும் கடவுளும் நீயே !

## கோலவிழி அம்மன்

சுந்தரி சுகந்தரும் சொரூபிணி கற்பூர
ஜோதி வடிவான தேவி ! சுமங்கலி கல்யாணி !
கலிகால மக்களைக் காத்தருள் செய்யும்
தாயே ! சந்திரசேகரி ! சதுர்மறை நாயகி !
சங்கடம் போக்கும் வடிவே ! கண்கண்ட
தெய்வமே ! உனையண்டுவோரிடம் கருணைமழை
பொழியுமாரி ! மந்திரச் சடாதரி! முக்கண்ணி
மாதங்கி ! மன்பதையின் ஆதி சக்தி
மீனாட்சி ! காமாட்சி ! காசி விசாலட்சியே !
மனோன்மணியே ! மகேசுவரியே ! வந்தாரை
வரவேற்கும் சென்னையில் மயிலை வாழ்
வரம்தரும் சக்திவடிவே மாதவன் தங்கையே
பூபதியின் நெஞ்சிலுறை கோலவிழி உமையே !

## முண்டகக் கண்ணியம்மன் !



முண்டகக் கண்ணியென்று
முவுலகும் போற்றநிதம்
அண்டமெல்லாம் காப்பவளே
ஆதிசக்தி ஆனவளே !
எண்டிசையும் புகழ்மணக்க
எழிலுருவம் கொண்டவளே !
கொண்டலெனக் கருணையுடன்
கோடிநலம் தருபவளே !

தாமரையில் உன்னுருவம்
தாங்கிடும் பேரழகு
பூமலரப் புகழ்மலரும்
பூமுகத்தில் பொன்மலரும்
சேம நலம் நீ பேசும்
சித்தாந்தக் கலையாகும்
நாமமொரு முண்டகமாய்
நாளும்புகழ் ஏற்பவளே !

பண்பு நிலையோடு பாம்புத் தலையோடு
அன்பு முகத்தோடு அருளும் உருவோடு
இன்ப வடிவோடு எரியும் நெருப்போடு
துன்பம் போக்கிடவே சிங்கப் பல்லோடு
முண்டகத் தேவிநீ முக்தியே அருளிடுவாய்
உண்டோம் உள்ளமுது ஓங்கார வெள்ளமெனக்
கண்டோம் காட்சியெலாம் கருமாரியானவளே
கைகொடுக்கும் தேவியே காத்திடுவாய் !

## சமயபுரம் பராசக்தி பாடல்

சமயபுரத்தம்மா தஞ்சமடைந்தேனம்மா
இமைப்பொழுதும் உனைமறவா
இதயமெனக் கருள்வாயம்மா !
உமையவளே உனையன்றி
ஒரு துணையும் காணேனம்மா !
இமைப்பொழுதில் ஏற்றருள்வாய்
பராசக்தி, காளியம்மா !



அருள்மிகு
சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன்

கண்கண்ட தெய்வமென்று
கருதிடும் ஏழையென்னைக்
கண் கொண்டு பாராவிட்டால்
கதியென்ன சொல்லம்மா !
கொண்டதோர் விரதமெல்லாம்
குலமாதா உனையன்றி
தொண்டினில் கண்டதில்லை
தோத்தரித்தேன் பராசக்தி, காளியம்மா !

எத்தனை வேண்டினாலும்
இரக்கம் வர வேண்டுமம்மா !
பக்தனைப் பாதுகாக்கும்
பராசக்தி காளியம்மா !
சித்தமே கொண்டாயாகில்
சீர்பெறுவேன் வாழ்நாளில்
நித்தம் உன்பதம் பணிந்தேன்
நிலைதருவாய் பராசக்தி காளியம்மா !

தாயென்று சேயுன்னே
தஞ்சம் அடைந்த பின்னே
நீயின்றி வேறுண்டோ
நெஞ்சத்தில் உதித்தவளே !
பேயென்று பிதற்ருமல்
பித்தனுய்த் திரியாமல்
தாயாக வந்தருள்வாய் நீயே பராசக்தி.
வரகவியால் பாடுகின்றேன்
வாழ்நாளைக் காத்திடம்மா !
விரதமெல்லாம் உன்மேல் வைத்தேன்
வேதத்தின் நாயகியே !
வரமொன்று தருவாயம்மா
வாக்கினில் அருள்வாயம்மா
வாரணமுகத்தோன் தாயே
வந்தருள் புரிவாய் நீயே !



## மதுரை மீனுக்ஷி

மஞ்சள் குங்குமம் மருக்கொழுந்து
மதுரை மீனுக்ஷி குலவிளக்கு
கொஞ்சிடும் நெஞ்சில் அருட்கடலே
கும்பிடத் தெய்வம் ஆனதம்மா !

பூவும் மணமும் பொட்டுமிட்டுப்
புதுமணப் பெண்போல் ஆடையிட்டுத்
தாவும் நெஞ்சில் அமைதிவரத்
தமிழே தெய்வம் ஆனதம்மா.

முக்குத்தி வைரம் ஜொலித்திடவே
முழுமதி நிலவாய் மின்னிடவே
காத்திடும் அருளே மீனுக்ஷி
கருணைத் தெய்வம் ஆனதம்மா !

உலகை ஈன்ற கன்னியிவள்
உண்மை ஈன்ற உருவமிவள்
சிலையாய் வந்த தெய்வமகள்
சிரித்துக் காக்கும் செல்வமகள்

அழகுகள் எல்லாம் இவளுருவம்
ஆசைகள் எல்லாம் மனப்பருவம்
இசைகள் எல்லாம் தமிழ்க்கீதம்
இன்பங்கள் எல்லாம் இவள்நாதம்

## மீனுக்ஷித் தாயே !

பசித்தாலும் மீனுக்ஷித் தாயே என்பேன் !
யாரு பழித்தாலும் மீனுக்ஷி தாயே என்பேன் !
சோறு புசித்தாலும் மீனுக்ஷி தாயே என்பேன் !
அன்பர் புகழ்ந்தாலும் மீனுக்ஷி தாயே என்பேன் !
தேகம் நசித்தாலும் மீனுக்ஷி தாயே என்பேன் !
என்ன நடந்தாலும் மீனுக்ஷி தாயே என்பேன் !
எங்கு வசித்தாலும் மீனுக்ஷி தாயே என்பேன் !
இம் மர்ம வாக்கியம் நான்கு மஹா மந்திரமாமே
அன்புற்றேன் அம்மை அருளால்
உலகெலாம் இன்புற்று வாழ்க இனிது !

சுரும்புமுரல் கடிமலர்ப் பூங்குழல் போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனங் குழைத்தென்னை எடுத்தாண்ட
அங்கையற் கண் எம்பி ராட்டி
அரும்புமிள நகைபோற்றி ஆரணநூ
புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி.

—பரஞ்சோதி முனிவர்



## மகாலெட்சுமி

செந்தாமரை மலரில் திகழ்கின்றவள்
ஸ்ரீரெங்கநாதனோடு மகிழ்கின்றவள்
சந்தான சௌபாக்கியம் தருகின்றவள்
தட்டாமல் ஓடோடி வருகின்றவள்
வற்ருது பால்வழங்கும் பசுவானவள்
மடிமீது உறவாடும் சிசுவானவள்
கற்ருர்க்கும் கல்லார்க்கும் உயிரானவள்
கண்நோக்கும் இடமெங்கும் பயிரானவள்
நன்செய்யும் புன்செய்யும் தாஞனவள்
நவதான்யப் புலம் எங்கும் மாஞனவள்
பொன்செய்யும் வேளாளர் கரமானவள்
புவியோரை வாழ்விக்கும் வரமானவள்.

## மங்களம் அருளும் மருவத்தூர் மாதா !

வேப்பமரத் தோப்புக்குள்ளே
கூப்பிடவே ஓடிவரும் மருவத்தூர் அம்மா—உன்
திருவருளைத் தாம்மா !

காத்திடவே கையெடுத்தோம்
பூத்திடவே அருளிடுவாய் மருவத்தூர் அம்மா
மருவத்தூர் அம்மா—நீ
திருவருள் தாம்மா !

ஆனந்தமே திருவுருவம்
கானங்களே உன்பிரியம்
மேகங்களே உன்வீடு
மேனியெல்லாம் பூக்காடு !

வானகமே குடியிருப்பு
வையகமே வந்தருள்வாய்
தானங்களே உன்பெருமை
தமிழமுதம் உன் மகிமை.

மருவத்தூர் அம்மா—உன்
திருவருளைத் தாம்மா !

பறந்து வந்து பாடுகிறோம்
பக்தி மனம் கூடுகிறோம்
சுயம்புவாக வந்தவளே
சுந்தரமாய் நிற்பவளே

மருவத்தூர் அம்மா !—உன்
திருவருளைத் தாம்மா !

புற்றுக்குள் பாம்பானாய்
பூவுலகில் மரமானாய்
கற்றிடவே அறிவானாய்
கனிந்திடவே அருளானாய்

மருவத்தூர் அம்மா !—உன்
திருவருளைத் தாம்மா !

ஆவேசம் வந்தாலோ
ஆங்காரம் கொண்டாலோ
நீ வேஷம் மாறி நின்று
நீலியாய்க் காட்சி தரும்

மருவத்தூர் அம்மா !—உன்
திருவருளைத் தாம்மா !

சாந்தகுணம் உன்னிருப்பு
சபைகளிலே உன்மதிப்பு
ஏந்திவரும் புகழிருப்பு
எம்முடைய பெருமதிப்பு

மருவத்தூர் அம்மா !—உன்
திருவருளைத் தாம்மா !

## ஓம் பராசக்தி

அன்பே சிவமாய் அணைப்பாள் நம்மை அன்னை பராசக்தி
ஆறுதல் சொல்லி அமுதம் பொழிவாள் ஆதி பராசக்தி
இப்புவி இன்பம் வேண்டாம் என்பாள் அன்னை பராசக்தி
ஈடில்லாக் காட்சி அளிப்பாள் ஆதி பராசக்தி
உயர்வு தாழ்வு ஒன்றும் பாராள் அன்னை பராசக்தி
ஊக்கம் இருந்தால் போதும் என்பாள் ஆதி பராசக்தி
எங்கும் நிறைந்த ஜோதியாய் நிற்பாள் அன்னை பராசக்தி
ஏகாட்சரமாய் அவனியில் வந்தாள் ஆதி பராசக்தி
ஐங்கரநாதனை ஆதியில் தந்தாள் அன்னை பராசக்தி
ஒட்டியாண பீடத்தில் அமர்வாள் ஆதி பராசக்தி
ஓம் என்றால் ஓடியும் வருவாள் அன்னை பராசக்தி
ஔவை எனவே அவனியில் வந்தாள் ஆதி பராசக்தி

## ஓம் சக்தி

நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப் பூண்
பஞ்சுக்கு நேர்பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர் பெருந் தீ !



வஞ்சனை யின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையக மாந்த ரெல்லாம்
தஞ்சமென் றேயுரைப்பீர் அவள்பேர், சக்தி
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம் !
நம்புவதேவழி யென்ற மறை தன்னை
நாமின்று நம்பி விட்டோம்
கும்பிட் டெந்நேரமும் 'சக்தி' யென்றுலுனைக்
கும்பிடு வேன் மனமே !
அம்புக்கும் தீக்கும் விடத்துக்கும் நோவுக்கும்
அச்சமில் லாதபடி
உம்பர்க்கும் இம்பர்க்கும் வாழ்வு தரும்பதம்
ஓம்சக்தி, ஓம்சக்தி, ஓம் !

## அன்னையை வேண்டுதல்

எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்த நல்லறிவு வேண்டும்
பண்ணிய பாவ மெல்லாம்
பரிதிமுன் பனியே போல
நண்ணிய நின்முன் இங்கு
நசித்திடல் வேண்டும் அன்னாய் !

## காளி

எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கும் நோக்கினும் வெற்றி மற்றுங்கே
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டினேனுக் கருளினள் காளி
தடுத்து நிற்பது தெய்வம தேனும்
சாரும் மானுடமா யினும்
படுத்து மாய்ப்பள் அருட்பெருங் காளி
பாரில் வெற்றி எனக்குறு மாறே !

—மகாகவி பாரதியார்

## மதுராபுரி அம்பிகை மாலை !

திருவே விளைந்த செந் தேனே வடியிட்ட தெள்ளமுதின்
உருவே மடப்பிள்ளை ஓதிமமேயொற்றை ஆடகப்பூந்
தருவேநின் றாமரைத் தாளே சரணம் சரணங் கண்டாய்
அருவே அணங்கர சேமது ராபுரி அம்பிகையே !

—குலசேகர பாண்டியன்

## மலைவளர் காதலி !

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம் பகி எழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரிசகஸ்
ரதள புட்பமிசை வீற்றிருக்கும்

நாரணி மனுதீத நாயகி குணுதீத
நாதாந்த சக்தி என்று உன்
நாமமே உச்சரித் திடும் அடியார் நாமமே
நான் உச்சரிக்க வசமோ ?

ஆறணி சடைக் கடவுள் ஆரணிஎனப் புகழ
அகிலாண்ட கோடி ஈன்ற
அன்னையே பின்னையும் கன்னிஎன
மறைபேசும் ஆனந்தரூப மயிலே.

வார்அணியும் இருகொங்கை மாதர்
மகிழ்க ங்கைபுகழ் வளமருவு தேவை அரசே
வரை ராஜனுக்கு இரு கண் மணியாய்
உதித்த மலை வளர்காதலிப் பெண் உமையே.

—தாயுமானவர்

## வராகி மாலை !

இருகுழை கோமளம்; தாள்புட்ப
ராகம்; இரண்டு கண்ணும்
குருமணி நீலம்; கை கோமேதகம்;
நகம் கூர் வயிரம்;
திருநகை முத்து; கனி வாய்
பவளம் சிறந்த வல்லி;
மரகத நாமம்; திருமேனி
யும் பச்சை மாணிக்கமே !

வீற்றிருப் பாள்நவ கோணத்திலே
நம்மை வென்று என்றுங்
காத்திருப் பாள்கலி வந்தணு
காமலென் கண் கலக்கம்
பார்த்திருப் பாளல்லள்; எங்கே என்று
அங்குச பாசம் கையில்
கோத்திருப் பாள்; இவளே என்னை
ஆளும் குல தெய்வமே !



## அன்னை பராசக்தி அகிலாண்ட ஈஸ்வரி

அன்னை பராசக்தி
அகிலாண்ட ஈஸ்வரியே
உன்னைப் பாடுகிறோம்
உள்ளத்தில் நீயிருப்பாய்.

மாமதுரை மீனாக்ஷி
மாநிலத்து அரசாட்சி
தேமதுரக் காமாக்ஷி
தென்காஞ்சி அரசாட்சி.

காசிநகர் விசாலாக்ஷி
கருத்தான பொருளாட்சி
ஆசிதரும் அபிராமி
ஆடுகிறாள் சிவகாமி.

மயிலையில் கற்பகமே
மனதிலே அற்புதமே
கயிலையில் பார்வதியே
கருத்திலே நிறுத்திடுவோம்.

நெல்லையில் காந்திமதி
நித்திய கல்யாணி
எல்லையில் குமரியாய்
என்றும் நிற்பவளே.

புதுவை நகரிலே
புவனேஸ்வரி ஆனவளே
மது கைடபரை
மகிசனை வென்றவளே !

தேவி பட்டணத்தில்
திரிசூலம் எடுத்தவளே
ஆவி நிகர்த்தவளே
ஆதியாய் இருப்பவளே !
காயத்திரி மந்திரத்தில்
கடைக்கண் பார்ப்பவளே !
மாயா ரூபிணியே
மங்கள நாயகியே.
லயமாகும் இசையிலே
லலிதா அம்பிகையே
ஜெயமாகும் வாழ்க்கை
ஜெகன்மாதா நீயன்றோ !
கொப்பை உடையவளே
கோடிகள் தருபவளே
தப்பைப் பொறுப்பவளே
தாரணி காப்பவளே
பாதம் பெரியவளே
பாட உரியவளே
நாதம் இசைப்பவளே
நாச்சியார் ஆத்தாளே
அறம் வளர்ப்பவளே
அன்பு தந்தவளே
மறம் அழிப்பவளே
மனதில் நிற்பவளே

ஆதி பராசக்தியே
அபிராமித் திருவுருவே
ஜோதி பராசக்தியே
சொர்ணத் திருவுருவே.

நீதி பராசக்தியே
நீலி பயங்கரியே
ஏது இனிக்கவலை ?
இதயத்தில் நீ உவந்தாய்

அன்னை பராசக்தி
அகிலாண்ட ஈஸ்வரியே
உன்னைப் பாடுகிறோம்
உள்ளத்தில் நீயிருப்பாய்.



## ஸ்ரீ மகா சரஸ்வதி

[தஞ்சை மாவட்டம் நன்னிலம் தாலுகாவில் திருவாரூர், மாயவரம் சாலையில் பூந்தோட்டம் பஸ்நிலையம் அருகில் கூத்தனூரில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ மகா சரஸ்வதி தேவி மிகுந்த சக்தி வாய்ந்த தெய்வமாக அருள் பாலித்துக் கொண்டுள்ளாள். கவி ஒட்டக்கூத்தர் இத் தேவியை வேண்டித்தான் கவிபாடும் அருள் பெற்றார் என்று சொல்லப்பெறுகிறது. ஊமையாக இருந்த புருசோத்தமன் என்பவர் பேசும் திறன் பெற்றதும் இங்கு தான். கலிகாலத்தில் இக் கலைவாணியை வேண்டிக்

கைமேல் பலன் கண்ட கலைஞர்களும், கவிஞர்களும் பலர் என்று சொல்லுகிறார்கள். இயன்றவர்கள் நேரிலும்; அல்லது மனத்தாலும் வழிபட்டு இம் மகா சரஸ்வதியின் அருளைப் பெறுவோமாக. குழந்தைகளின் கல்வி; கேள்வி; ஞானம் இவை சிறக்க இத்தேவி அருள்புரியட்டும்]

## கலைமகள்

ஆரண நான்கு மோரா றங்கமு மலகி லாத
காரணங் காட்டு ஞானக் கலைகளுந் தானாய் நின்ற
வோரணங் கினைப்பூ மேலோன் றனதுநா வுறையுந் தெய்வ
வாரணங் கிளமென் கொங்கை மயிலினை
வணக்கஞ் செய்வாம்.

## அமுதவல்லியம்மை

பலவகை யண்ட மெல்லாம் பானிலாக் கற்றை சுற்றி
யிலகிய தரள மாக்கி யிளமுலைக் கணியும் பேதை
யுலகெலா மகிழ்ந்து போற்றுந் திருக்கள ருவந்து மேவு
மலைமக ளமுதவல்லி மலரடி வணக்கஞ் செய்வாம்.

—திருக்களர்ப் புராணம்

மானே மரகதமே அன்னமே நவ மாமணியே
வானே ஒளிதரும் பொற்கொடியே நவ மாதங்கியே
கானேர் மொழியணங்கே இன்பமே அருட்கண் மணியே
தேனே திருவொற் றியூர்வாழ் திரிபுர சுந்தரியே !

—திரிபுரசுந்தரி மாலை

வாணாள் அடைவர் வறுமை யுறார்நன் மனைமக்கள் பொன்
பூணாள் இடம்புகழ் போதம் பெறுவர்பின் புன்மை ஒன்றும்
காணார்நின் நாமம் கருதுகின் றோர்ஒற்றிக் கண்ணுதல்பால்
மாணார்வம் உற்ற மயிலே வடிவுடை மாணிக்கம்.

—திருவருட்பா

# ஸ்ரீலலிதா த்ரிசதீ நாமாவளி:

(ஒவ்வொரு நாமாவளிக்கும் முதலில் 'ஓம்' என்றும் முடிவில் 'நம:' என்றும் சேர்த்துக் கூறவும்)

ககார ரூபாயை
கல்யாண்யை
கல்யாண-குணசாலின்யை
கல்யாண-சைல-நிலயாயை
கமனியாயை
கலாவத்யை
கமலாக்ஷ்யை
கல்மஷக்ன்யை
கருணாம்ருத-ஸாகராயை
கதம்ப-கானன வாஸாயை 10
கதம்ப குஸுமப்ரியாயை
கந்தர்ப்ப-வித்யாயை
கந்தர்ப்ப-ஜனகாபாங்க வீக்ஷணாயை
கர்ப்பூரவீடி-ஸௌரப்ய-கல்லோலித-ககுப்-தடாயை.
கலிதோஷ-ஹராயை
கஞ்ஜ-லோசனாயை
கம்ரவிக்ரஹாயை
கர்மாதி-ஸாக்ஷிண்யை
காரயித்ர்யை
கர்மபல-ப்ரதாயை 20
ஏகார-ரூபாயை
ஏகாக்ஷர்யை
ஏகானேகாக்ஷ ராக்ருத்யை
ஏதத்-ததித்-யநிர்தேச்யாயை
ஏகாநந்த-சிதாக்ருத்யை
ஏவமித்யாகமா போத்யாயை.
ஏகபத்தி மதர்ச்சிதாயை
ஏகாக்ரசித்த நிர்த்யாதாயை
ஏஷணாரஹிதா த்ருதாயை
ஏலாஸுகந்தி சிகுராயை 30
ஏந:கூடவிநாசிந்யை
ஏகபோகாயை
ஏகரஸாயை
ஏகைச்வர்ய ப்ரதாயின்யை
ஏகாதபத்ர ஸாம்ராஜ்ய ப்ரதாயை
ஏகாந்த பூஜிதாயை
ஏதமான ப்ரபாயை
ஏஜதனேஜஜ்-ஜகதீச்வர்யை
ஏகவீராதி-ஸம்ஸேவ்யாயை
ஏகப்ரபாவ-சாலின்யை 40
ஈகார ரூபாயை
ஈசித்ரியை
ஈப்ஸிதார்த்த ப்ரதாயின்யை
ஈத்ருகித்யவிநிர்த்தேச்யாயை
ஈச்வரத்வ விதாயிந்யை
ஈசாநாதிப்ரஹ்ம-மய்யை
ஈசத்வாத்யஷ்ட ஸித்திதாயை
ஈக்ஷித்ர்யை
ஈக்ஷணஸ்ருஷ்டாண்ட கோட்யை
ஈச்வர வல்லபாயை 50
ஈடிதாயை
ஈச்வரார்த்தாங்க சரீராயை
ஈசாதி தேவதாயை
ஈச்வர ப்ரேரணகர்யை
ஈசதாண்டவ ஸாக்ஷிண்யை

ஈஸ்வரோத்ஸங்க நிலயாயை
ஈதிபாதா விநாசின்யை
ஈஹாவிரஹிதாயை
ஈச சக்த்யை
ஈஷத்ஸ்மிதானனாயை 60

லகாரரூபாயை
லலிதாயை
லக்ஷ்மீவாணி நிஷேவி தாயை
லாகின்யை
லலனாரூபாயை
லஸத்தாடிம-பாடலாயை
லலந்திகா-லஸத்பாலாயை
லலாட-நயனார்ச்சிதாயை
லக்ஷணோஜ்வல திவ்யாங்க்யை
லக்ஷகோட்யண்ட நாயிகாயை 70

லக்ஷ்யார்த்தாயை
லக்ஷணாகம்யாயை
லப்த காமாயை
லதா தனவே
லலாமராஜ தலிகாயை
லம்பமுக்தா-லதாஞ்சிதாயை
லம்போதர ப்ரஸவே
லப்யாயை
லஜ்ஜாட்யாயை
லயவர்ஜிதாயை 80

ஹ்ரீங்கார ரூபாயை
ஹ்ரீங்கார நிலயாயை
ஹ்ரீம்பத ப்ரியாயை
ஹ்ரீங்கார பீஜாயை
ஹ்ரீங்கார மந்த்ராயை
ஹ்ரீங்கார லக்ஷணாயை
ஹ்ரீங்கார-ஜப-ஸுப்ரீதாயை
ஹ்ரீம்-மத்யை
ஹ்ரீம் விபூஷணாயை
ஹ்ரீம் சிலாயை 90

ஹ்ரீம் பதாராத்யாயை
ஹ்ரீம் கர்ப்பாயை
ஹ்ரீம் பதாபிதாயை
ஹ்ரீங்கார வாச்யாயை
ஹ்ரீங்கார பூஜ்யாயை
ஹ்ரீங்கார பீடிகாயை
ஹ்ரீங்கார வேத்யாயை
ஹ்ரீங்கார சிந்த்யாயை
ஹ்ரீம்
ஹ்ரீம் சரீரிண்யை 100

ஹகாரரூபாயை
ஹலத்ருத் பூஜிதாயை
ஹரிணேக்ஷணாயை
ஹரப்ரியாயை
ஹராராத்யாயை
ஹரிப்ரஹ்மேந்த்ரஸேவிதாயை
ஹயாரூடா ஸேவிதாங்க்ர்யை
ஹயமேத ஸமர்ச்சிதாயை
ஹர்யக்ஷ வாஹனாயை
ஹம்ஸ வாஹனாயை 110

ஹததானவாயை
ஹத்யாதிபாபசமன்யை
ஹரிதச்வாதி ஸேவிதாயை
ஹஸ்தி-கும்போத்துங்க-குசாயை
ஹஸ்திக்ருத்திப்ரியாங்கனாயை
ஹரித்ரா குங்குமாதிக்தாயை
ஹர்யச்வாத்யமரார்ச்சிதாயை

ஹரிகேச ஸக்யை
ஹாதி வித்யாயை
ஹாலாமதாலஸாயை 120
ஸகார ரூபாயை
ஸர்வஜ்ஞாயை
ஸர்வேச்யை
ஸர்வ மங்களாயை
ஸர்வகர்த்ர்யை
ஸர்வபர்த்ர்யை
ஸர்வஹந்த்ர்யை
ஸநாதந்யை
ஸர்வானவத்யாயை
ஸர்வாங்க ஸுந்தர்யை 130
ஸர்வஸாக்ஷிண்யை
ஸர்வாத்மிகாயை
ஸர்வஸௌக்ய தாத்ர்யை
ஸர்வ விமோஹிந்யை
ஸர்வாதாராயை
ஸர்வகதாயை
ஸர்வாவகுணவர்ஜிதாயை
ஸர்வாருணாயை
ஸர்வமாத்ரே
ஸர்வாபரண பூஷிதாயை 140
ககாரார்த்தாயை
காலஹந்த்ர்யை
காமேச்யை
காமிதார்த்தாயை
காமஸஞ்சீவின்யை
கல்யாயை
கடினஸ்தனமண்டலாயை
கரபோரவே
கலாநாதமுக்யை
கசஜிதாம்புதாயை 150
கடாக்ஷஸ்யந்தி கருணாயை
கபாலி ப்ராணநாயிகாயை
காருண்ய விக்ரஹாயை
காந்தாயை
காந்திதூதஜபாவல்யை
கலாலாபாயை
கம்புகண்ட்யை
கரநிர்ஜ்ஜித பல்லவாயை
கல்பவல்லீ ஸமபுஜாயை
கஸ்தூரி திலகாஞ்சிதாயை160
ஹகாரார்த்தாயை
ஹம்ஸகத்யை
ஹாடகாபரணோஜ் வலாயை
ஹாரஹாரிகுசாபோகாயை
ஹாகிந்யை
ஹல்யவர்ஜ்ஜிதாயை
ஹரித்பதி ஸமாராத்யாயை
ஹடாத்கார ஹதாஸுராயை
ஹர்ஷப்ராதாயை
ஹவிர்போக்தர்யை 170
ஹார்த்தஸந்த மஸாபஹாயை
ஹல்லீஸலாஸ்ய ஸந்துஷ்டாயை
ஹம்ஸமந்த்ரார்த்த ரூபிண்யை
ஹானோபாதான நிர்முக்தாயை
ஹர்ஷிண்யை
ஹரிஸோதர்யை
ஹாஹாஹூஹூ முகஸ்துத்யாயை
ஹானிவ்ருத்திவிவர்ஜிதாயை
ஹய்யங்கவீன ஹ்ருதயாயை
ஹரிகோபாருணும் சுகாயை 180

லகாராக்யாயை
லதாபூஜ்யாயை
லயஸ்தித்யுத் பவேச்வர்யை
லாஸ்யதர்சந ஸந்துஷ்டாயை
லாபாலாப விவர்ஜிதாயை
லங்கயேதராஜ்ஞாயை
லாவண்யசாலிந்யை
லகுஸித்திதாயை
லாக்ஷாரஸ ஸவர்ணுபாயை
லக்ஷ்மணுக்ரஜ பூஜிதாயை 190
லப்யேதராயை
லப்தபக்தி ஸுலபாயை
லாங்கலாயுதாயை
லக்னசாமர ஹஸ்த ஸ்ரீ
சாரதா பரிவீஜிதாயை
லஜ்ஜாபத ஸமாராத்யாயை
லம்படாயை
லகுளேச்வர்யை
லப்தமானுயை
லப்தரஸாயை
லப்தஸம்பத் ஸமுந்நத்யை 200
ஹ்ரீங்காரிண்யை
ஹ்ரீங்காராதயே
ஹ்ரீம் மத்யாயை
ஹ்ரீம் சிகாமணயே
ஹ்ரீம்காரகுண்டாக்நிசிகாயை
ஹ்ரீங்கார-சசி-சந்த்ரிகாயை
ஹ்ரீங்கார பாஸ்கர ருச்யை
ஹ்ரீங்காராம்போத
சஞ்சலாயை
ஹ்ரீங்கார கந்தாங்குரிகாயை
ஹ்ரீங்காரைக பராயணுயை
210
ஹ்ரீங்காரதிர்க்கிகா
ஹம்ஸ்யை

ஹ்ரீங்காரோத்யானகேகிந்யை
ஹ்ரீங்காராரண்ய ஹரிண்யை
ஹ்ரீங்காரவால வல்லர்யை
ஹ்ரீங்கார பஞ்ஜர சுக்யை
ஹ்ரீங்காராங்கண தீபிகாயை
ஹ்ரீங்கார கந்தரா ஸிம்ஹ்யை
ஹ்ரீங்காராம்
போஜப்ருங்கிகாயை
ஹ்ரீங்காரஸுமனேமாத்வ்யை
ஹ்ரீங்கார தருமஞ்ஜர்யை 220
ஸகாராக்யை
ஸமரஸாயை
ஸகலாகம ஸம்ஸ்து தாயை
ஸர்வவேதாந்த தாத்பர்ய
பூம்யை
ஸதஸதாச்ரயாயை
ஸகலாயை
ஸச்சிதானந்தாயை
ஸாத்வ்யை
ஸத்கதிதாயிந்யை
ஸநகாதிமுனித்யேயாயை 230
ஸதாசிவ குடும்பிந்யை
ஸகலாதிஷ்டாந ரூபாயை
ஸத்ய ரூபாயை
ஸமாக்ருத்யை
ஸர்வப்ரஞ்ச நிர்மாத்ர்யை
ஸமாநாதிக வர்ஜிதாயை
ஸர்வோத்துங்காயை
ஸங்க ஹீனுயை
ஸகுணுயை
ஸகலேஷ்டதாயை 240
ககாரிண்யை
காவ்யலோலாயை
காமேச்வர-மனேஹராயை

காமேச்வர-ப்ராண நாட்யை.
காமேசோத்ஸங்க வாஸிந்யை
காமேச்வராலிங்க தாங்க்யை
காமேச்வர-ஸுகப்ரதாயை
காமேச்வர-ப்ரணயின்யை
காமேச்வர-விலாஸிந்யை
காமேச்வர-தபஸ்ஸித்யை 250
காமேச்வர-மந:ப்ரியாயை
காமேச்வர-ப்ராணநாதாயை
காமேச்வர-விமோஹிந்யை
காமேச்வர-ப்ரஹ்மவித்யாயை
காமேச்வர-க்ருஹேச்வர்யை
காமேச்வராஹ்லாதகர்யை
காமேச்வர-மஹேச்வர்யை
காமேச்வர்யை
காமகோடி நிலயாயை
காங்க்ஷிதார்த்த தாயை 260
லகாரிண்யை
லப்தரூபாயை
லப்ததியே
லப்தவாஞ்சிதாயை
லப்தபாப மனோதூராயை
லப்தாஹங்கார துர்க்கமாயை
லப்தசக்த்யை
லப்ததேஹாயை
லப்தைச்வர்ய ஸமுந்நத்யை
லப்தவ்ருத்தயே 270
லப்தலீலாயை
லப்தயௌவந சர்லிந்யை
லப்தாதிசய ஸர்வாங்க ஸௌந்தர்யாயை
லப்த விப்ரமாயை
லப்த ராகாயை
லப்தபத்யை
லப்தநானாகம ஸ்தித்யை
லப்த போகாயை
லப்த ஸுகாயை
லப்த ஹர்ஷாபி பூஜிதாயை 280
ஹ்ரீங்கார மூர்த்தயே
ஹ்ரீங்கார ஸௌத ச்ருங்க கபோதிகாயை
ஹ்ரீங்கார துக்தாப்தி ஸுதாயை
ஹ்ரீங்காரகமலேந்திராயை
ஹ்ரீங்காரமணி தீபார்ச்சிஷே
ஹ்ரீங்கார தரு சாரிகாயை
ஹ்ரீங்காரபேடக மணயே
ஹ்ரீங்கார தர்ச பிம்பிதாயை
ஹ்ரீங்கார கோசாஸி தாயை
ஹ்ரீங்காராஸ்தான நர்த்தக்யை 290
ஹ்ரீங்கார சுக்திகா முக்தாமணயே
ஹ்ரீங்கார போதிதா
ஹ்ரீங்காரமய ஸௌவர்ண-ஸ்தம்ப-வித்ரும-புத்ரிகாயை
ஹ்ரீங்கார வேதோ பநிஷதே
ஹ்ரீங்காராத்வர தக்ஷிணாயை
ஹ்ரீங்கார நந்தனாராம நவகல்பகவல்லர்யை
ஹ்ரீங்கார ஹிமவத் கங்காயை
ஹ்ரீங்காரார்ணவ கௌஸ்துபாயை
ஹ்ரீங்காரமந்த்ர . ஸ்வர்ஸ்வாயை
ஹ்ரீங்கார-பர-ஸௌக்யதாயை 300

—ஸ்ரீ லலிதா த்ரிசதி நாமாவளி ஸம்பூர்ணம்—





# திருவிளக்கு அர்ச்சனை

[பின்வரும் நாமாவளிகள் முன்பாக "ஓம்" என்றும், நாமாவளியின் முடிவில் "நம:" என்றும் சேர்த்துக் கூறி அர்ச்சனை செய்யவும்.]

சிவசக்தியே
இச்சா சக்தியே
கிரியா சக்தியே
ஞான சக்தியே
சொர்ணசொரூபியே
ஜோதி லக்ஷ்மியே
தீப லக்ஷ்மியே
மஹாலக்ஷ்மியே
தனலக்ஷ்மியே
தான்யலக்ஷ்மியே 10
தைர்யலக்ஷ்மியே
வீரலக்ஷ்மியே
விஜயலக்ஷ்மியே
வித்யாலக்ஷ்மியே
ஜெயலக்ஷ்மியே
வரலக்ஷ்மியே
[illegible]லக்ஷ்மியே
காமாட்சி சுந்தரியே
சுபலக்ஷ்மியே
ராஜலக்ஷ்மியே 20
கிருஹலக்ஷ்மியே
சித்தலக்ஷ்மியே
சீதாலக்ஷ்மியே
திரிபுரலக்ஷ்மியே
சர்வ மங்களகாரணியே
சர்வ துக்கநிவாரணியே
சர்வாங்க சுந்தரியே
சௌபாக்கியலக்ஷ்மியே
நவக்கிரஹதாயினே
ஜயாயை 30
மங்களா தேவ்யை
பில்வ நிலயாயை
ஸுபாயை
பத்மாயை

நித்ய புஷ்டாயை
கமலாயை
காந்தாயை
ஹரிவல்லபாயை
அம்ருதாயை
தீப்தாயை
லோகசோக விநாசின்யை
தர்மநிலயாயை
கருணாயை
பத்மப்ரியாயை
பத்மநாப ப்ரியாயை
ரமாயை
சந்த்ரவதநாயை
சந்த்ராயை
சதுர்புஜாயை
தனதான்யகர்யை 50
பாஸ்கர்யை
ஸுப்ரதாயை
மஹாகாள்யை
புவனேஸ்வர்யை
ஏகபோகாயை
ஏகாந்த பூஜிதாயை
சர்வேஸ்யை
நாராயண்யை
பூர்ணாயை
புவனேஸ்வர்யை 60
அம்பிகாயை
அனுக்ரஹதாயை
ருத்ர ரூபாயை
கோவிந்த ரூபிண்யை
பத்மாஸனாயை
நாதரூபாயை
ரம்யாயை
ரதிரூபாயை
கல்யாண்யை
காந்தாயை
வரதாயை 70
விஷ்ணு மாயாயை
விஜயாயை
விமலாயை
பரதேவதாயை
சிவப்ரியாயை
பரமேஸ்வர்யை
அவ்யக்தாயை
த்ரிநயனாயை
காலகண்ட்யை 80
காந்திமத்யை
வாமதேவ்யை
வதனத்வாயை
மேதாயை
சகஸ்ர தளபத் மஸ்த்தாயை
சர்வதோமுக்யை
தயாமூர்த்யை
ஸ்ரீவித்யாயை
மகாவித்யாயை
ஆத்மவித்யாயை 90
காமகோடிகாயை
குருமூர்த்யை
குணநிதயே
தண்டநீதிஸ்தாயை
ஆதிசக்தியை
திரிபுராயை
திரிமூர்த்யை
சிந்தூர திலக காஞ்சிதாயை
உமாயை
கந்தர்வ ஸேவிதாயை 100
விஸ்வ கர்ப்பாயை
யோகதாயை
யோக்யாயை
அன்னதாயை
சாஸ்வத்யை
ஸச்சிதானந்த ரூபிண்யை
திரிபுரசுந்தர்யை
ஸ்ரீ ராஜராஜேஸ்வர்யை 108

## குங்கும அர்ச்சனை

குங்கும அர்ச்சனை செய்தவர்க்கு அம்பாள்
கோடி கோடி பொன்னைக் கொடுப்பவளாம்.
சந்தனத்தால் அபிஷேகம் செய்தவர்க்கு
சர்வ அபீஷ்டங்கள் கொடுப்பவளாம்
நெய்யால் அபிஷேகம் செய்தவர்க்கு அம்பாள்
நித்ய தரிசனம் கொடுப்பவளாம்.
பாலால் அபிஷேகம் செய்தவர்க்கு அம்பாள்
பல ஜென்ம பாவத்தைப் போக்கிடுவாள்
கனியால் அபிஷேகம் செய்தவர்க்கு அம்பாள்
கண் முன்னே வந்து நிற்பவளாம்.
தீராத வினைகளைத் தீர்ப்பவளாம் தேவி
திருவடி சரணம் சரணம் அம்மா.
பவ பய ஹாரிணி அம்பா பவானியே
துக்க நிவாரணி துர்க்கே ஜெய ஜெய
கால விநாசினி காளி ஜெய ஜெய
சங்கஸ்வரூபிணி மாதவியே அம்பா.

## மங்கையர்க்கு ஏற்ற குங்குமக் கவசம்

44. கோபக் கண்ணோடு உன் கணவனை நோக்காதே. எதிர்ப்பவளா யிருக்காதே. பசுக்களிடம் அன்புடன் இருக்கவும். நல்ல புகழுடனிருக்கவும். வீரப் புதல்வர்களின் தாயாயிருக்கவும். தேவர்களை விரும்பவும். சுகத்தைத் தருபவளா யிருக்கவும். எங்களுடைய ஆட்களுக்கும், கால் நடைகளுக்கும் செல்வத்தைத் தருபவளாயிருக்கவும்.

—இருக்கு வேதம். (85. திருமணம். சூக்தம் 922)

[இல்லத்தில் மாலைப் பொழுதில் விளக்கு ஏற்றி வைத்து குங்குமத் திலகம் இட்டுக் கொண்டு படிக்க ஏற்ற கவசம் இது. குறிப்பாக வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் மிகுந்த

## குங்குமக் கவசம்

குங்குமமாவது குறைகளைத் தீர்ப்பது.
குங்குமமாவது குடியினைக் காப்பது.
குங்குமமாவது குணமது அளிப்பது.
குங்குமமாவது கொல்வினைத் தீர்ப்பதே.
விதிதனை வெல்வது விமலையின் குங்குமம்
நிதிகளை ஈவது நிமலையின் குங்குமம்.
பதிதனைக் காப்பது பதிவிரதைக் குங்குமம்.
கதிகளை ஆள்வதும் கருத்தான குங்குமம்.
தஞ்சமென் றோரைத் தடுத்தாட் கொள்வதும்
பஞ்சமா பாதகம் பரிந்துமே தீர்ப்பதும்
அஞ்சின பேருக்கு அபய மளிப்பதும்
காஞ்சி காமாக்ஷி கருணைக் குங்குமம்.
நற்பத மீவது நாரணிக் குங்குமம்.
பொற்பினை ஈவது பூரணிக் குங்குமம்.
சிற்பரமாவது ஸ்ரீ சக்ர குங்குமம்.
கற்பினைக் காப்பதும் காரிகை குங்குமம்.
செஞ்சுடர் போன்றது சீரான குங்குமம்.
கொஞ்சும் அழகைக் கொடுப்பதும் குங்குமம்.
ஐந்து புலன்கள் அடக்கி ஆள்வதும்
காசி விசாலாக்ஷி கனிவாம் குங்குமம்.
நோயினைத் தீர்ப்பதும் நுண்ணறிவு ஈவதும்
பேயினைத் தீர்ப்பதும் பெரும்புகழ் ஈவதும்
சேயினைக் காப்பதும் செல்வம் தருவதும்
தாயினை அருச்சித்த தன்னொளிக் குங்குமம்
சக்தி கொடுப்பதும் சத்தியம் காப்பதும்
பக்தி அளிப்பதும் பரகதி ஈவதும்
முக்தி கொடுப்பதும் மும்மலம் தீர்ப்பதும்.
சித்தி தருவதும் சிறந்த குங்குமம்
நெஞ்சிற் கவலைகள் நீக்கி அருள்வதும்
செஞ்சொற் கவிபாடும் சீரினை ஈவதும்
வஞ்சகப் பகைவரை வாட்டி அருள்வதும்
மதுரை மீனாக்ஷி மங்கலக் குங்குமம்.

சிவசிவ என்றுமே திருநீறணிந்த பின்
தவமான மேலோருந் தரித்துக் களிப்பதும்
சிவகாமியே எனச் சிந்தித்து அணிவதும்
பவவினை தீர்ப்பதும் பராசக்தி குங்குமம்.
எவையெவை கருதிடின் அவையவை ஈவதும்
நலவகை சக்தியின் நலனைக் கொடுப்பதும்
குவிசெய் கரத்துடன் கும்பிட்ட பேருக்கு
குவிநிதி ஈவதும் குலநலக் குங்குமம்.
அஷ்ட லெக்ஷ்மி அருள் தந்தளிப்பதும்
இஷ்டங்கள் ஈவதும் ஈடற்ற குங்குமம்.
கஷ்டம் தவிர்த் தென்னைக் காத்தருள்வதும்
அஷ்ட ஸ்ரீ சக்ர ஆனந்தக் குங்குமம்
குஷ்ட முதலான மகாரோகந் தீர்ப்பதும்
நஷ்டம் வராதொரு நலனைக் கொடுப்பதும்
எட்டிரண்டோர் அறிவித்தோர் வீடினைக்
கிட்டவே செய்வதுங் கேண்மைக் குங்குமம்.
பட்ட காலிலே படுமெனக் கஷ்டங்கள்
விட்டி டாமலே வந்து வாட்டினும்.
பட்டான பார்வதி பாதம் பணிந்தே
இட்டார் இடர்தவிர்க்கும் இனிய குங்குமம்.
சித்தந் தனைச்சுத்தி செல்வதற் கெளியதோர்
எத்துந் தெரியாதே ஏமாந்த மாந்தரே !
நித்தம் தொழும் அன்னை குங்குமம் தன்னை
நித்யம் தரித்துமே மேன்மை அடைவோம்.
மிஞ்சும் அழகுடன் குங்கும ஆடைகள்
செஞ்சுடர் ஆகுமோர் ஸ்ரீ சக்ரம் ஈஸ்வரியின்
கஞ்ச மலர்முகம் தன்னில் திகழ்வதும்
பஞ்ச நிதிதரும் பண்புக் குங்குமம்.

## ஸெளமங்கல்ய ஸ்துதி

[திருவிளக்கு முன்பு காலையிலும் மாலையிலும் சுமங்கலிகள் 12 முறைகள் படிக்கவும் ]

"ஓங்கார பூர்விகே தே வீணாபுஸ்தக தாரிணி ।
வேதமாத : நமஸ்துப் யம் அவை தவ்யம் ப்ரயச்சமே ॥

## ஸ்ரீ மாங்கல்ய ஸ்துதி

*[கல்யாணமாக வேண்டியவர்கள் காலையில் தேவி படத்தின் முன்பு விளக்கேற்றி வைத்துச் சிவப்பு புஷ்பங்களைத் தேவிக்கு அணிவித்துப் பக்தியுடன் பன்னிரு முறைகள் பாராயணம் செய்யவும்.]*

*ஓம் ஸ்ரீ துர்காயை சர்வ விக்ன விநாசிந்யை நம :*

## ஸ்ரீ ருக்மணிதேவி ஜெபித்த துர்க்கா ஸ்தவம்

*[கல்யாணம் ஆகாத பெண்கள் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் ஐந்து முக தீபம் ஏற்றி ஆசாரத்துடன் 9 தடவைகள் இந்த ஸ்லோகங்களை ஜெபித்தால், அவர்களின் ஜாதக ரீதியான தோஷங்கள் நிவர்த்தியாகி நல்ல கணவனை அடைவார்கள்.]*

*''நமாமி த்வாம்பிகே பீக்ஷ்ணம் ஸ்வசந்தாநயுதாம் சிவாம்*
*பூயோத் பதிர் மே பகவான் கிருஷ்ணஸ்ததநு மோததாம்*
*காத்யாயநி மஹாமாயே மஹாயோகிந்ய தீச்வரி*
*நந்தகோப ஸுதம் தேவி பதிம் மே குருதே நம.''*

## ஸ்ரீ ஜெகன்மாதாவின் ஸ்தவம்

*[இதைத் தினமும் ஜெபித்தால் சர்வ கஷ்டங்களும் நிவர்த்தியாகும்.]*

*''மாதா மரகதசியாமா மாதங்கீ மதசாலிநீ*
*குர்யாத் கடாக்ஷம் கல்யாணீ கதம்பவனவாஸிநீ''*

## பெரும் புகழ் பெற்ற பெரியபாளையத்தம்மன்

*செங்காவிப் பட்டுடுத்திச் சிங்காரப் பொட்டுமிட்டுச்*
*செங்குருதிக் கண்ணோடு சிங்கப் பல்லோடு*
*கொங்கை குலுங்கிடவே குத்தீட்டி தானெடுத்து*
*கோபம் கொப்பளிக்கக் கொடிகட்டி வந்தவளே !*
*சிங்கத்தின் மீதேறிச் சீற்றம் கொண்டவளே !*
*அங்கங்கள் தூளாக அரக்கரை வென்றவளே !*

மங்காத ஒளிவிளக்கே; மாபெரும் பாளையத்தில்
மனங்குளிர நின்றவளே; மாதரசே !

பெரிய பாளையத்தில் அரியதொரு சக்தியானுய்
பேசவரும் கவிஞர்க்கு ஆசுகவி சித்தியானுய்.
உரிய உன்னுருவம் உள்ளத்தில் நிழலாக
உன் பெருமை உலகெங்கும் புகழாக
திரிபுரம் எரித்தவரின் தேவீ நீ ஓடிவந்து
தெண்டனிடும் பக்தருக்குத் தரிசனம் தாராயோ ?
விரிமலரே; வேல்விழியே; பெரியவளே !
வெற்றிநலம் பற்றிடவே விரைந்தோடி
வாராயோ ?

பாளையத்துக்காரி என்ருல் பண்பெல்லாம் சேராதோ ?
பண்ணிசைக்கும் வேளையிலே இன்பநிலை
வாராதோ ?
ஆலயத்துக்காரி என்ருல் ஆன்மசுகம் கூடாதோ ?
அலங்காரி ஓடிவர அகமெல்லாம் குளிராதோ ?
ஞாலமெல்லாம் புகழென்ருல் ஞானநிலை வாராதோ ?
ஞானியரும் வானவரும் உன்வீடு தேடாரோ ?
காலமெல்லாம் உன்புகழைக் கவிபாடிக் களிக்கேனே ?
கருணைமனம் தந்து நீ கைகொடுக்க வாராயோ ?

## மாம்பலத்தில் மகிமையுடன் கொலுவிருக்கும் முப்பாத்தம்மன்

குங்குமச் சங்கமத்தில் கொலுவிருக்கும் முப்பாத்தா !
தங்கநிறத் திருச்செல்வி தாளிணைகள் போற்றிடுவோம்
எங்கணுமே உன்னருளில் இவ்வுலகம் இயங்குதம்மா !
பங்கமில்லாப் பெருவாழ்வே; பண்பாடும் பெருநலமே;
செங்கனிச் சிரிப்பழகே; செந்தூரப் பொட்டழகே;
அங்கமெல்லாம் அருள் மணக்கும் ஆனந்தப் பேரழகே;
இங்கிதமாய் இசைபாட எழுந்தருளி வந்திடுவாய் !
கங்கை நீர் அமுதமெனக் கருணை நீ பொழிந்திடுவாய்.

திருவெற்றியூர் ஸ்ரீ பாகம்பிரியாள்

# சரணக் கோவை

[ஒவ்வொரு திருநாமத்திற்கும் முன்னுல் "ஓம்" என்றும் முடிவில் "போற்றி" என்றும் சேர்த்துச் சொல்லி மலர் வழிபாடு செய்யவும் இதனைப் பயன்படுத்தலாம்.]

ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்

1. அருள் தரும் அன்னையே சரணம் என் அம்மா
2. அபய வரதையே
3. அரசர்க்கு அரசியே
4. அரியாசனம் ஏறும் அம்பிகையே
5. அகிலாண்டநாயகியே
6. அபிராம சுந்தரியே
7. அபிஷேக வல்லியே
8. அலங்காரச் செல்வியே
9. அறம் வளர்க்கும் அம்மையே
10. அன்ன பூரணியே சரணம் என் அம்மா
11. அதார சக்தியே
12. ஆதிபரா சக்தியே
13. ஆனந்த ஞானவடிவே
14. ஆனை முகன் அன்னையே
15. இசை ஞானம் தரும் ஈஸ்வரியே
16. இமய மலை வாழும் உமையே
17. ஈசன் மனையாட்டியே
18. உபதேச குருவே
19. உயிர் காக்கும் தெய்வமே
20. உலக நாயகியே

21. எங்கள் குல தெய்வமே
22. எங்கெங்கும் ஆன இறைவியே
23. ஏழைகளின் செல்வமே
24. ஐந்தவித்தார் ஆற்றலே
25. ஓய்யார அன்னமே
26. ஒளி வளர் விளக்கே
27. ஓங்கார ரூபிணியே
28. ஓம் சக்தி தேவியே
29. ஓதாமல் உணர்விப்பவளே
30. கடு விஷம் களைபவளே
31. கருணையின் நிலையமே
32. கரை சேர்க்கும் கப்பலே
33. கற்பூர ஜோதியே
34. காசி விசாலாட்சியே
35. காமாட்சித் தாயாரே
36. குண்டலினி சக்தியே
37. குறை தீர்க்கும் கொற்றவையே
38. சகல கலா வல்லியே
39. சகல தேவ தேவி சொரூபியே
40. சஞ்சலம் களையும் அஞ்சுகமே
41. சண்முகன் தாயே
42. சப்த மாதாவே
43. சரணுகதித் தெய்வமே
44. சிந்தூர வண்ண பிம்பமே
45. சிம்ம வாகனியே சரணம் என் அம்மா
46. சிவயோக நாயகியே
47. சிவனுர் தம் பாகம் பிரியாதவளே
48. சிறையாரவார மயிலே
49. ஜெகமாயை சாய்க்கும் படையே
50. ஜெயமாக வந்த துணையே
51. செங்கோல் பிடித்த திருவே
52. செங்கிரை ஆடும் மகளே
53. சௌந்தர்ய லஹரியே

54. சௌபாக்ய நாயினியே
55. ஞானப் பூங்கோதையே
56. தடைகளை அகற்றும் தையலே.
57. தனக்குவமை இல்லாத தலைவியே
58. திரிசூலம் ஏந்தும் தேவியே
59. திரிபுர சுந்தரியே
60. திருமாலின் தங்கையே
61. திருவெற்றியூர் தெய்வமே
62. தில்லைச் சிவகாமியே
63, தீப மங்கள ஜோதியே
64. தீர்த்த மாதாவே
65. துர்க்கா-லட்சுமி-சரஸ்வதியே
66. துன்பக் கடல் கடத்தும் தோணியே
67. தென் பாண்டி நாட்டு நிலவே
68. தேன் பெற்ற வண்ண மலரே
69. தேவாதி தேவியே
70. நவராத்திரி நாயகியே
71. நான்மறை முதல்வியே
72. பதினாறு பேறும் தரும் பகவதியே
73. பழம் புற்று நாயகியே
74. பரம கல்யாணியே
75. பாசாங்குசம் தரித்தவளே
76. பாண்டிமா தேவியே
77. பிழை பொறுக்கும் பெரியவளே
78. பூபாள நாதமே
79. பெரும் பெயர் பெற்றவளே
80. மங்கல மடந்தையே
81. மஞ்சள் மாதாவே

82. மதி சூடும் ஐயன் துணையே
83. மதுரை மீனாட்சியே
84. மறை நீதி காக்கும் திறலே
85. மருவாசம் தவழும் மாணிக்கமே
86. மனத்துயர் போக்கும் மகாசக்தியே
87. மழைக்கால மேகமே
88. மஹிஷாசுர மர்த்தனியே
89. மாபாதகம் தீர்ப்பவளே
90. மாணிக்க வல்லியே
91. மாயா விநோதினியே
92. மாரி-மகமாயி-உமையே
93. முக்கண் படைத்த மூர்த்தியே
94. ரத்தினப் பதுமையே
95. லலிதா பரமேஸ்வரியே
96. வரையாது கொடுக்கும் வள்ளலே
97. வன்மீக நாதன் தேவியே
98. வாய்மை வடிவானவளே
99. வாராத செல்வம் வருவிப்பவளே
100. வாழ்விக்கும் வள்ளலே
101. வினை தீர்க்கும் தேவியே
102. வீரமாகாளியே
103. வேட்கை தணிக்கும் வெள்ளமே
104. வேராகி நின்ற பொருளே
105. வேப்பிலைக் காளியே
106. ஸ்ரீ சக்ர வாசினியே
107. சிவசக்தி ரூபிணியே
108. ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியே

அறிந்தும் அறியாமலும், தெரிந்தும் தெரியாமலும் செய்த சகல குற்றங்களையும் பொறுத்துக் காத்து அருள் புரிவாய் அம்மா. திருவெற்றியூர்ப் பழம்புற்றுநாதர் உடனுறை பாகம்பிரியாளே, தாயே சரணம்-சரணம்-என் அம்மா !

## மங்களம்

அன்னை அன்னை அன்னை அன்னை அன்பினுக்கு மங்களம்
ஆதிசக்தி அம்பிகைக்கு அனந்தகோடி மங்களம்
என்னுள்ளே விளங்கும் எங்கள் ஈஸ்வரிக்கு மங்களம்
இச்சையாவு முற்பவிக்கும் சிற்சிவைக்கு மங்களம்

எப்பிறப்பும் எய்தொணு இயற்கையான சித்தியை
இப்பிறப்பில் என் கரத்திசைந்தளிக்கும் சக்தியாம்
பஞ்சபூத பேதமாய் பிரபஞ்சமாய் ப்ரசண்டமாய்
விஞ்சிஞள் எனக்கு யோக விறளித்த தன்மையால்

தாழ்விலாத தன்மையும் தளர்ச்சியுற்ற வன்மையும்
வாழ்விஞல் பயன்களும் என்வாக்கிலே வரங்களும்
பக்தியிற் கசிந் தலைந்து பாடுகின்ற பான்மையும்
பாடுவோர்க் கனேக போக பாக்கியங்கள் மேன்மையும்
என்றும் ஓங்க என் கரத்தியற்கையான சக்தியைத்
தந்துஞான மூர்த்தியாய்த் தனித்துவைத்த சக்தியாய்

—அன்னை

நாம கீர்த்தனம் பரந்து நாடெல்லாம் செழிக்கவும்
வேறிடாத இன்பம் பொங்கி வீடெலாம் விளங்கவும்
ஞான தீபமேற்றி யென்றும் நாமகீதம் பாடுவோம்
தர்ம சக்தி வாழ்கவென்று சந்ததம் கொண்டாடுவோம்.

—அன்னை




